தவளவிர சிதகுகொடுப்போர சந்திரன்வாழ் பதமுறுக தரணி யீவோர்
திவளுமுடி யிந்திரனாய் விண்முழுதும புரக்கதிக பூப்பீ வோர்க
டிவளவரு மிடும்பையெலாந் துமித்தின்ப முறுகதுவர்க் கனிவாய் வேய்த்தோட்
குவளைவிழிக் கண்ணியரைக் கொடுப்பவர்கள் விண்டெபதங் குலாவி வாழ்க. 8

அன்னதா னம்புரிவோ ரன்னமொரோ வொன்றினுககுக கற்ப மொவ்வொன்
றென்னையா ளுடையபிரான் சிவலோகத் தினிதமர்க விலிஙக மீவோர்
துன்னுபோ கம்பலவு மீண்டெய்தித் தோலாத வினப மெல்லா
மன்னுமீ சுரபதத்தி னேற்றவர்க ளொடுமினிது மருவி வாழ்க 9

சிவசிசியிற் சிவலிஙக முபகரணத் தொடுமளிபபோர சிறப்ப வேற்றிட்
டவமறுபூ சனைபுரிவோ ரபபொழுதே சீவன்முதத ராக நெஞ்சக
கவலையறு கண்மணிக ளீவோரு மேற்பவருங கயிலா யத்து
முவமையறு சிவபுரத்து மொரோரொவொன்றுக கொருபதிற்றுண் டுறைந்து வாழ்க.10

மும்மலந்தாட் படப்படுக்கு மித்தலததின முற்றவஙகண் முயன்ற பேற்றுற்
செம்மைபெறுஞ் சிவஞான மளிப்பவரு மேற்பவருஞ் செயிரிற் றீர்ந்து
விம்மியபே ரானநத வெள்ளததுள் வாதனையும விலகி மூழ்க
வம்மவிந்த ஞானதல மமுதேச மெனுமபெயரு மணிவ தாக. 11

அமுதேச மெனப்படுமித தலததெல்லை யையகுரோ சததி னுள்ளா
லமையாத காதலினு லந்தணரைப் பதிட்டைசெயவோ ரலக்க ணீங்கி
யிமையார்க ளழுக்கறுப்பப் பிரமத்தின் வாழ்கவிவாக கவணி யீநதோ
ரமையாளு நாயகசா ரூபத்திற் சீவன்முத்தி யெய்தி வாழ்க. 12

திருமாலைப் பதிட்டைசெய்வோர திப்பியமாம் வைகுந்தஞ் சேரநது வாழ்க
பொருவேது மில்லாத சிவலிஙகப் பதிட்டைசெய்வோர பொக்க நீங்கி
யொருவாத விம்மைமறு மையிற்போக நுகர்ந்துயர்நத வீடு சேர்க
பெருவாழ்வு தருமிந்தத் தலம்வசிப்போர நின்னடியைப் பிரியா ராக. 13

வேறுவே றிவ்வாறு வரம்பலவும விழைநதிரந்து வியந்து போற்றி
நாறுபூங குழலுமையா ளுதர்திரு முகநோக்கி நமப யான்முன்
கூறியதோர வினவினுக்குத் தாமீண்டு கொடுத்துமெனக் குறித்தி யன்றே
தேறுமா றினியவுநுவுந் தெரித்தருளா யெனக்கேட்ட தேவ தேவன். 14

இரந்தபல வரஙகளு மீந்திட் டாமதுச்
சுரந்தபன் மலர்க்குழற் றோகை மற்றினி
யரநதைவை யகந்தனக் கறவி னுயதற்
குரந்திக ழிறையுமிங குரைதது மென்றுபின் 15

நன்னிழற் பாப்புறு நாவற் றருவாய்
முன்னுறுஞ் சம்புமா முனியை நோககினு

னனது தெரிந்தவ ளுடித தாழ்ந்தெழூந்
துன்னருங களிப்பின் லுரைத்தன் மேயினுன். 16

அடியனே னுய்ந்தன னடிய னேனுறுங
குடிமுத லெழுமையுங கோதற் றய்ந்தன
முடிபொதிரத் தெழுந்தவிம முறிசெய் நாவலங
கடிநிழற் கருணையிற் கலந்த நீரமையால, 17

எழிலமு தீச்சா மென்னு மிதத்தலங, தொழுதகு சமபுவீச் சரமென ருெதவு
நிழலிதி னென்றுநீ நிலையின் வைகவு, மழகிய வரமென வருளல வேணடுமால. 18

என்றுபல வரஙகளு மிரபப வெம்பிரா, னன்றென வவையெலா நலகிப் பாஙகரிற்
றுன்றிய மறைபல துதிக்கும வேதன்மே, லொன்றிய வருள்விழி யுறுத்தி ஞனரோ.

கமலமெல்லணையினுன கசிந்துதாழ்ந்தெழுந, தமலனேயுயந்தனேனகிலகோடியுந
திமிரவலவினைகளிற்றீரந்தின்றுயநதவென், றிமிழ்கொளுமனபிஞலினிதுகூறுவா
[ன்.

காசின மிலகிய கண்டத தெம்பிரான, மாசிமா மதிவரு மதியி ஞெளனப்
பேசிய மிருகசீ ரிடததிற பேணிய, தேசவிர விடைகொடி சிறப்ப வேறறுபு. 21

பொஙகெழிற திருவிழாப பொலியச செய்துபின
பஙகுனி மதியிடைப் பகரொண ஞெளனத்
தஙகிய வுரோகணி தன்னி னீள்கொடி
யிஙகுயி ரனைததுமின் பெயதத தாழ்ததுபு. 22

அற்றைநா ளொனபெய ரணிநத தீரததகதி
னுற்றவ ரனைவரு முவந்து தோயவு
மற்றவா வேட்டபல வாஙக ளெய்தவும
உறறிய தெனதுளம் பணிகக வென்றனன். 23

பஙகய னின்னணம பகரக கேட்டரு
ளஙகண னன்னண மாக வெனறுபின்
றஙகிநின் றேததுநா தஙகண் மேலெலாம்
பொஙகருள விழியெதிர புகுததி ஞனரோ 24

அவரவா மகிழ்சசியி னடிகள் போறறிநின
றிவறிய வரமெலா மியமபிப் பெற்றனா
சிவபிரா னினனணம் வரஙகள் சோதரதென
வுவமையி லருளுமைக் குதவப் புககனன. 25

# ஞானோபதேசப்படலம்.

சந்த வான்மதி மிலைச்சிய தாழ்சடை யழகா
நந்தி வாண்முக நோக்கினா நந்திதாழ்ந் தெழுந்து
முந்த ஞாதிரு வுளத்தெழு முன்னமிக் கறிந்திட்
டந்தின் மேயினு ரியாரையும் புடையகற் றினரால்  1

சம்பு மாதவ னாநதியென் றிருவருந் தவங்க
ளும்ப ராக்கரி யனமிக வுஞற்றிய பேற்று
லம்பா மாதுமை யாளொடுங் கேட்கிய வருளபெற
றெம்பி ரானிருந் தருள்புரி மண்டப மிழைத்தார்.  2

சிமைய மாலவரை யெனச்சிறந் தொளிருமண் டபத்தி
னமையு மாதனத் தங்கணன் வீற்றிருந் தருளி
யுமையை நோக்கிநீ யோகுழப பதின்விரு யினையாற
சமைய மாறுமுய்ந் திடவது கேளெனச் சாற்றும  3

உலக மியாவையு மோங்கிய நமதருள் வழியி
னிலவு நீர்மைய தாதலி னிழன்மணிப் பூணு
யிலக வாட்டுவா ளுடிமுன் காட்டுமா றெனனப்
பலவு நூம்பயின் றுலகினைப் பயிற்றுதல் வேண்டும்.  4

ஆகை யானமல பந்தமா கியவுயிர் மாயா
போக மாரதா நிற்றழீஇப் போகியா யிருந்தும
யோக மாற்றிமெய்ஞ் ஞானமுற் றுயாசிவ யோகத
தேக மாகிவீ டெய்திட யோகியா யிருந்தும.  5

விரைத்த மெனமலா வாளியான் விளிந்தகா ரணமு
நிரைத்த வையகத் தியாவரு நேரிழை யவர்பால்
வரைத்த வின்னல நுகாந்தகா ரணமுமா னனையா
யுரைத்த வொண்பொரு ளிரண்டிற்குஞ் சான்றென வுணாதி.  6

என்று கூறலு மகிழ்ந்துமை யிறைஞ்சியீ துரைக்கு
மொன்று மாமலத் தழுந்திய வுயிரெலா மாயைத
துன்று போகமுற றுனதருண் ஞானத்தாற் றுகடீர
நன்று வீட்டினை நண்ணுமென றுரைத்திநா யகனே.  7

இருளு மாமலம யாதுயி ராதியா மாயை
கரும மியாதுமெய்ஞ் ஞானமியா தியாதுகாண முதநி
பொருவி லாவிவை யனைததையும புகாற வடியேன
றெருளு மாறரு ளுதியெனச் செப்பவாய் மலாநதாள. 8

சிலையு யிாததவ ளினனணம விமறவலுந தெரிககும
கலைம லாககரத தணிநதருள கண்ணுதற் பெருமா
னிலைமு கததபூ ணிளமுலை மாதரா யெலலா
மலைவ றததெளிப் பாமதி யெனவிறை வழஙகும. 9

காள வன்மல மூலநதங காலமெல லைகளின்
மீளு மெண்ணருஞ் சததிக ளுடையபதாப விபவிக
கோளு றுமபசு வறிவினைக கூட்டொடு மறைககும
வாளு றும்பல விழியினை மறைததிடு மிருள்போல. 10

எண்ணி றந்தன சிறறறி வினுமபல வியலபி
னண்ணி நிறபன ஞானததன வணணமாய நவிலவை
வண்ணு சிற்றறி வினுஞ்சுதந் தரததன வல்ல
வுணண யந்தநா முணாததிடி னுணாவன வுயிரே. 11

மாயை சுததமே யசுததமே யெனவிரு வகையா
மாய மாயைக ளிாண்டுமெய யறிவுரு வலலாற்
றோயு முதநம மருளினுற் றெழிலுற்று றுயிாககு
மேய சீாததனு வாதிக ளுணகுமாய விரியும. 12

கரும மெனபது மாயையே கருவிக ளாகத
தெருள்வ ழஙகுநம மருளெனப படுநதிரோ தானப
பொருவில சததியின் சகாயததாற புலலறி வுயிாகண
முருகு விம்மிய குழலினுய முனைநதுசெய தொழிலாம 13

புநதி வாக்குரு வததினும புரியுமன் னதுதான
வநது நலலதுந தீயது மெனவிரு வகையா
மந்த நல்லதுந தீயதுஞ் சஞ்சித மாகிப
பிநதி யாருயிாக குணவுமாய்ப் பிறப்புககும் விததாம 14

உருவத தாறகரு மநதவ வீட்டியு முருவங
கருமத தாற்றவ வீட்டியுங காழ்ததவா ணவமே
மருவத் தாழ்ந்தகே வலததிடை மன்னிய வுயிரிற
றிருவத தாஞ்சக லததியா னெனதெனச் செருககும். 15

இதமெ னப்படு நலவினை யின்பமே பயககு
மிதமெ னப்படாத் தீவினை யின்னலே பயககு

மதர்செ ருங்கணாய் மற்றவை யறிந்துசெய் வினையுங்
கதுவு நெஞ்சறி யாதுசெய் வினையுமாய்க் கலவும். 16

புடைபெ யர்ந்திடும் வினைபுடை பெயர்தரா வினையென
நடைவி னோதிய வவ்வினை யிவ்விதத் திரண்டாந்
தொடைம லர்க்குழன் மாயையுங் கருமமுந் தொகுத்துத
தடைசெய் யாணவத் தொடுமல மூன்றெனத் தகுமால். 17

மாயை காரிய மானமா மாயையு நமது
தூய சீரரு ளொனுந்திரோ தாயியுந் தொகுத்திட்
டாயு நூன்மல மைந்தென வறைவது முண்டாற்
றேயு நூலிடை வருத்திய திதலைமென் முலையாய 18

இனைய வைம்மல பந்தமு மிரண்டெனும் பழைய
வினையும் வன்மல வேருமான் மாவினுக் கல்லாற்
றினையு நந்தமக் கில்லைநந் திருவரு ளொழிய
வனைய மாயையுங் கருமமு மாவியு மசையா. 19

இந்த மாயையுங் கருமமும் பந்தமே யிவற்றைத
தந்த தாருயிரக் கென்னெனிற் சாற்றுதுங் கேண்மோ
முந்து மாணவ முரண்கெட மூட்டின மாசு
சிந்த வேறுமா சறுவையிற் செறித்திடு மாபோல். 20

படைத்த லுமபுவ னங்களைப் பாதுகாத் தலும்பின்
றுடைத்த லுந்தக நிறுத்தலு மருடுறுத் தலுமென்
றடுத்த வைந்தொழி லயன்முதற் லைவரு மாய்நா
மெடுத்து நின்றன மாயினு மெமக்கிலை விகாரம். 21

விரவு மாயையெம் முடைமையற் றாயினும விடாதா
னரவை யென்செய்யு மங்கியைச் சூடெவன் செய்யும
பரவு மிந்திர ஞாலப்பண் ணுநரையென் செய்யுங
குரவ மாலையா யெமக்கது கொடாதுகாண் மயக்கம். 22

அல்ல தூஉமிரு ளாணவ மயக்குவ ததனு
னல்ல மாயையுங் கருமமு நாடிய வுயிரை
வல்ல வாறெலா மயக்குவ மயக்குமா ணவந்தேய்ந்
தில்லை யேலவை யுயிரையு மயக்குவ திலையே. 23

தேங்கு பேரொளி யாகிய சிவமெனு நாமு
நீங்கு றாதநஞ் சத்தியாய் நிலைபெறு மருளுந்
தூங்கு மாவியுந் தொடர்திரோ தாயியும் பிந்த
வோங்கு மாணவத் தெறும்வலி யுரைப்பரி தணங்கே. 24

கரிய வாணவந் தேயுமா கலந்தநஞ் சத்தி
யுரிய தாஞ்சிவ புண்ணிய முடன்விரா யூட்டும்
பெரிய வாட்கனாய் பின்மல பாகமாம் பின்னர்
விரியுஞ் சத்திநி பாதம்பின் வினையொப்பு மேவும். 25

ஆய வேலையின் மலமெனு வறைதிரோ தாயி
மாயி ரும்பொருள் யாவையு மாறவே மாறித்
தூய வின்னரு ளாகியே நின்றிடுந தோகா
யேயு மிவ்வரு ளாலவ திருதுயிர்க் கிருளே. 26

இச்சை ஞானமுங் கிரியையு மானவிவ் வருளே
துச்சி லாகிய கலாதியிச் சையுந்தொலைத் திட்டு
வெச்செ ருணவம் விழுங்கிடப் பட்டவா ருயிரி
னிச்சை யாதியும் விளக்கியுள் ளிருத்திமே லாகும். 27

பிறிவு றுதவெம மருளினு லெமமையும் பெயரா
மறிவி னீங்கிய தன்னையு மலைவறத தெரிந்த
வறிவு பானுவின் விழியென வெம்முளே யடங்கிச்
செறியு மானந்த மொன்றுமே திளைகருந்தே மொழியாய். 28

மருளி னுன்முத லென்றலு மன்னுயி ரருள்கண்
டருளி னுன்முத லென்றலு மருண்முத லென்றார்
தெருளி லாததி லழுந்தலுந் தீர்ந்தெமமோ டறிவா
யிருள்செய கேவலம் போற்கலந திருப்பதே முததி 29

பேத·மாகிய பாவனை பேணுவ தெல்லா
மேத மாகிய பநதமே யெனதியா னெனுமால்
• போத வாருயி ரபேதபா வனைபுரி வஃதே
மாத ராயுயர் முத்தியென் றுரைத்திடு மறையும். 30

பரிதி முன்னிரு ளெனமலம் பரையிடை மாயுங
கருவி முன்பகல் விளகெகாடு மடுக்குமூ ழொன்றே
மருவு மன்னதுங கருணையால் வாஙகுவம் யாமே
பொருவில் சஞ்சித முன்னரே யழிந்தது பூவாய். 31

என்ற வூழுட விருத்தலி னேறும்வல் வினையுந்
தோன்று மேற்றிரு வெழுததினைச சூழ்ந்திடி னழியுஞ்
சான்ற வீட்டினைச் சாாந்தவர் தமக்குமா லையமுன்
மூன்று மாாவமோ டிறைஞ்சுதன் முறைமையா மணஙகே. 32

தொடுதத நின்பெருங கடாவினுக் கவிர்பொலங் மதாடியாய
விடுத்த னம்விடை யறிகென விமலனு ரருள •

மடுத்த வன்பொடு கேட்டமால வரைமக ளோடுந
தடுத்த வைம்பொறி நந்தியுஞ் சம்புமா முனியும. 33

அருளெ லாமுளத் தழுத்தினர் தெளிந்தனா ரிட்டை
மருளெ லாந்தப மருவினா மன்னுமுப் பாழு
மொருவி மேற்பெரும் பாழெனு முவப்பிலா னந்தப்
பொருளொ டேகமாயப் பொருந்திடு முத்தரா யிருந்தார 34

சீவன் முத்தியே திகழ்பர முத்தியே யென்ன
மேவு முத்தியோ ரிரண்டினு மேவின ராகி
மூவ ரும்பணி முயன்றிருந் தன ரயன முயன்ற
தேவ ருந்தொழு திருவிழாத் திறமினித் தெரிப்பாம் 35



# திருவிழாப்படலம்.

பொறிவண் டெழக்க முறக்கவிழ்ந்து புதுச்தேன் றளிக்குஞ் செழுங்கமல
நறுமென் பொகுட்டு மலர்த்தவிசி னனைகு தலைப்பண் ணவனுறைவுற
செறிமென் னிழலில் வீற்றிருக்குந் தேவா தேவ னருள்வாத்தா
னெறிநின் றினிய திருவிழா நிலைத்திற் புரிவா னிதுசெய்தான். 1

புரிசை யாதி பலவுறுப்பும் பொருப்பென் றெவரு மதிசயிப்ப
வரிசை யாக வாலயநூன் மரபின் வகுத்து தக்கிரணங்கள்
விரிசெய் மாட மாளிகைகள் விறந்த பலவீ தியும்போக்கித்
துரிசி லாத மணிநகரந் துறக்க நாண நிருமித்தான். 2

நெகிழுன் புருக்க வகிலாண்ட நிமலை யுருவ மிருந்தாங்கே
திகழ வுளத்திற் றியானித்துச சிற்பம் விளங்கத் திருவுருவொன்
றகில வுயிருங் கதிசேர வமைத்து நிறுவிப் பூசித்துப்
புகழைங் கரன்வேண் முதலான புலவ ருருவு மினிதமைத்தான். 3

செம்பொன் மணித்தேர் கடாங்கவிழ்க்குஞ் சினவெங் களிறு வாம்புரவி
யம்பொற் சிவிகை கவிகைகொடி யால வட்ட மயிர்க்கவரி
யிம்பர் விழையும பலபொருளு மீண்ட வாக்கி விழாமுடங்க
வும்பர் முதலோர் வரவிடுத்தா னுலக மாக்கும் பணிதொடுத்தான். 4

முடங்க லேற்று மலர்த்தவிசின் முறையி னிருத்தி முடிதாழ்த்தி
மடங்க லறியா மகிழ்சிறப்ப மதர்க்கண் மடமா தாகளோடு
மிடங்கொள் வானத் திமையாரு மெண்மா திரரு முரகாகளும்
விடங்கொப் புளிக்கு மணிவேற்கை வேந்தர் பலருஞ் சென்றிறுத்தார. 5

வம்பு விரியுஞ் செழுங்கமல மலாமெல் லணையான் மகிழ்சிறப்பக்
கும்ப மதியிற் கார்த்திகைநாள் குலவுந் தினத்தி லியமியம்ப
வும்பர் முதலோர் புடைசூழ வொளிர்மண் விதியாற் றினிற்கவர்ந்து
பம்பு மணிப்பா லிகைபலவும் பரப்பிச் சொரிந்து முளைதெளித்தான். 6

வழிநா ளடுத்த வுரோகணியின் மதவெள் விடையை யிலேகித்த
செழிவான் படத்திற் பூசித்துத் திகழு மிருக சீரிடத்திற்
கழிவா னவர்க டொழுஞ்சோமாக் கந்த ரெதிரே யெழுந்தருளப்
பழிதீர்ந் துலக முழுதுய்யும் படிவார் கொடியிற் பசுவுயர்த்தான்.

அந்நாண் மாலை முதலாக வந்த நாளுக காறென்று
நன்னாட் காலை யிருக நவிற்று மீரைங காலத்தும
பொன்னா மணிககிம் புரிககோட்டுப் புகதேண் முருக வேளிவர்கருக்
கொன்னா தரவிற் றிருவிழாக் கோலம் பிறங்கக் குயிற்றினான். 8

ஆறுந் திருநாண் மாலைமுத லாக வொன்பா னாட்காலை
யீருங் காலை மோரா று மிருண்மா மலத்தி னிகலகடந்து
வேறாய்ச் சிவத்தி னொன்றாகி விளங்கு நீறுங் கண்மணியும
பேறாத தரிக்கு மடியார்க்குப் பிறங்கத திருச்சா றினிதெடுத்தான். 9

ஒன்பான் றிருநாண் மாலைமுத லாக வொருபன் னிரண்டாநா
டன்பாற் காலை யிருகச் சாற்று மாறு காலதது
மன்பா தரவிற் கலியாண வழகா தமக்குத திருவிழா
நன்பார் முழுதுங் களிதூங்கி நவையிற நீர வினிதமைத்தான். 10

ஒருபன் னிரண்டாந் திருநாளி னுற்ற மாலை முதலாகப்
பொருவில் குண்ட மோரைந்திற் பொங்கு தழலா குதியோமபி
மருவு மிருநாற் றிசைமுழுது மனுவாற் றகைததுப் பலியோக்கிச
செருவின் மலியத் திரதேவா தமக்கு விழாமுன் செயதிட்டு. 11

பதினே ழெனவந் திடுதிருநாட் பயினற காலை யிருக
விதியா னின்ற வீரைந்து காலத் திடத்தும் வெவ்வேறு
கதிசே ரூர்தி மேல்கொண்டு கவின்சந் திரசே கராபோத
நிதியா பலருந் தானங்க ணிகழ்ததி வணங்க விழாவெடுத்தான் 12

அந்தப் பதினே ழெனுந்திருநா ளந்திக் காலத திமிலேற்றுச
சந்தப் படமோ ரெட்டினையுந் தயங்கப் பூசை யினிதமைத்துப்
பந்தப் பழைய வினைமுருங்கப் பதினெட் டெனுநாட் காலைதனில
வந்தப் பணிந்தா ரெதிர்நிறப வயங்கெண் கொடியும் பசுவுயர்த்தான். 13

ஒன்பா னிரட்டித் திருநாளென் றுரைதத வைகன் முதலாக
வொன்பான் மணிக்குண் டமுஞ்செந்தீ யொளிர வந்நாண் மாலையினில்
வன்பார மகள்செய் தவமவாய்ப்ப மணிநித திலப்பந தரினீழ
லென்பா பரணப் பெருமானா ரெதிரில் வீசி யுலாப்போந்தார். 14

புணரு மிடனும வரைக்கிள்ளை பூங்கைக் கருப்புச் சிலைமலர்க்கோ
லணவு தொழிற்கேற் புறக்கிரியி னணங்கு செலுத்த வவட்கினிய
கணவர் பூத நாதரெனக் கரையும பெயாக்கேற் புறப்பூதத்
தணிவி லூர்தி பததொன்பா னாளிற் றயங்கக் கடாவினார். 15

திருமா றனது கூறேயாஞ் செயலைத் தெரித்தாங் கவனணையை
யொருபா லுமையாள் கொளக்கொடைமைக் கொருவ ரிவரே யெனவெவரு

மருளா துணரக கொடைவழஙகு மலாககற பகததை யணணலா
ரிருபான றினததிற றிருவீதி யெழிலகொப் புளிப்பத தூணடினா. 16

மன்ற வடியாா புரிகுறற மதியா தவாசெய குணஙகொளளு
நனறி தெரிததாங கறன்கங் நறபா லுழுமடுள ளுமையூரக
குனறு நினைந்தாங கியலகொளகை கொள்ள வெவவுங கயிலாய
மொன்று தலைபபெ யிருபானு ளுவப்புற் றிறைவ ருநதினா. 17

தரும விடையு மாலவிடையுஞ் சகல பொருளு மொருபாதி
மருவு வுருவிற பாதியுறு மாதுந தாமும் பகுத்தாஙகுப்
பொருவெள விடைகள் வெவ்வேறு பூஙக ணுமையு மொருதாமுந
தெருவி னிருப திரண்டாநாட் செமமற சிவனா நடாவினா. 18

மூன்று தலைப்பெய யிருபதென மொழியுந திருநா ளவிாசெமபெ
ருன்ற மணித்தே ரைஙகரனு மயிலவே லிறையுஞ் சணடனுஙகான
கான்ற வெறிப்பூங குழற்கொடியுங கதுமென றுகைப்பப் புரமநாட்
சான்ற நிலத்தோ பொருமணிததோ சஙகத தலைவ ருருட்டினா. 19

விலஙகற் காசன றாமகளிாக காசாய விளஙகுந தனககியைய
விலஙகுக காசை யகிலாணட விமலை யுகைபப வமுதேசா
மலஙக மிததாா வடிவிடததும வதித தெரிததாங கருண்மயமா
யிலஙகு நநதி தனையறுநான கென்னு நாளி னியககினா. 20

ஐயைந தெனவந திநதிருநா ளாநதோ ளியினமா துமையேக
வையந தரித்த வயிற்றிவுளி மலகுங கலியிற் றீயோாக
ஊனயுந் திறஞ்செய வரம்பெறுவா ருடிச சுமநத தெனவணப்புச்
செய்யும் பூாவி மேற்கொண்டு செக்கர்ச் சடையா ருக்கினா. 21

பயிலவா னவாகள பலாகாவப் பசுமபொற குழைககா துமைமாது
செயிர்தீா சிவிகை மேற்கொளளத திகழ்நத வாதிப் பெருஞ்செலவப
பெயரா தரிககுஞ் செயறகேற்பப் பேணு மிருபத் தாறுநா
ளயிரா வணத்தை வெணணுவ லடிவீற் றிருந்தா ரினிதுகைததாா 22

மன்றி னடிககும் பெருமானா வயஙக விருபத தேழாநா
ளொன்றும் விடியற் சிறுகாலை யுவப்பக காட்சி கொடுததறபி
னன்று வருமு ரோகணிநண் பகலி னயனா தீாததத்திற
கொன்றை முடியா ரிருந்தீாததங் கொடுததா ருலகங குறைதீா. 23

அந்நாண் மாலை யெண்கொடியு மாணட பசுவே றினிதிறஙகப்
பின்னு மிருபத் தெட்டாநாட் பேணு மாலை முதலாக
முந்நாண் மாலை யீறாக மூன்று பொழுதுஞ் சிவிகையின்மே
லென்னுள் பள்ளி யறைப்பெருமா னெழிலாா கோயி லுலாப்போநதான்.

மோன முறுநற் றிருவிழா முப்பத் தொருநாண் முதலாக
வீன மகல மூன்றுநா ளியங்கை முப்பத் தொருநான்கென்
றூன தினமுன் மூன்றுநா ளருள்சேர் திலகு சண்டேச
ஞான மகன்ற மணிமுத்தி னூர்தி நிழலி லுலாப்போந்தான. 25

மொழிந்த சண்டன் றிருவிழா முடிவா முப்பத தாருநா
ளிழிந்த குணத்தார் மனமேபோன் றிருண்ட கங்கு லிணர்மலர்கள்
பொழிந்து புலவர் போற்றிசைப்பப் போற்று மடியார் மும்மலமு
மழிந்து விடமற் றொருகொடியி னேறே றிறக்கி யயன்றொழுதான. 26

மறைசூத் திரமே புராணமே வயங்கு கீத மேநிருத்த
நிறைவாத் தியமே யெனவைந்து நேரே யியம்ப வளமெல்லா
முறையா நின்ற வுட்சூழன் முதலா வரண மோரைந்து
மிறையார் முப்பத தேழாநா ளிமையார் வியப்ப வுலாப்போந்தா. 27

துணிநீர்ப் பாங்கர்ச் சூழ்போக்கித் தோடார் மலர்கண் மிகப்பெய்து
மணியா ணிரைத்த மண்டபத்தின் வதிந்து முப்பத் தெட்டாநா
ளணிநீ ராடிக் கலவைமுத லணிந்து சுவையா றுணவயின்று
பணியா பரணப் பெருமானார் பற்றும் விடாயைப் பாற்றினார் 28

அற்றைத் திருநாள் வளர்மாலை யவிர்ந்த திலப்பந் தரினீழற்
கொற்றக் கவிகை சாந்தாற்றி கோலக் கவரி கொடிபிறவும
பற்றிக் கடவு ளார்போற்றப் பவனி யினிது போந்திறைவா
முற்றக் கவினு மணிக்கோயின் முன்னி யுமையோ டமர்ந்திருந்தார. 29

இவ்வா றுதிப் பெருஞ்செல்வக் கியைய வாதிப் பிரமனா
செவ்வாய் மையினு லினிதெடுத்த திருவார் விழாவை மானிடரு
மவ்வா னவரு முவந்தாதிப் பிரமோச் சவமென் றனறுமுதற்
றுவ்வா வமிழ்தங் கண்டாரின் வருடந் தோறுந் தொழாநின்றா. 30

ஆதிப் பிரமன் றிருவானைக் காவி னமர்ந்தார்க் கினிதெடுத்த
காதற் சிறப்புத் திருவிழாக் கவினப் புரிந்தோர் தெரிசித்தோர்
தீதற் றவனி முழுதாண்டு தேவர் போகம் பெரிதார்ந்து
சாதற் பிறப்பிற் றலைப்படாத் தனிவீட் டின்பத் தழுந்துவார். 31

மூவா முதல்வன் றிருவிழா முடிவிற் பிரம தீர்த்தத்தி
னோவா வன்பிற் படிந்தோரு முலக முழுது மொருதிகிரி
தாவா துருட்டி விண்ணுண்டு சனன மரணப் பெருந்துக்க
நீவா வளர்பே ரின்பநல நீங்கா நிலையிற் றங்குவார். 32

திங்கட் கடவுள் கதிர்க்கடவுள் சேரு மூவா ததோ றொருவருடந்
தங்கு மனைய தீர்த்தத்திற் சார்ந்து படிந்து வெண்ணுவைற்

பொங்கு நிழலின் வீற்றிருந்த புனிதர் பாதம் போற்றிசைத்தோர்
துங்க வினையும் பெரும்பிணியுந் தொலைத்தா னந்தத் துறைபடிவார். 33

செந்தா துகுக்கு நறுங்கமலச் செம்ம லெடுத்த திருவிழா
நந்தாச் சிறப்பிற் சிறிதுரைத்தா நல்ல தவத்தீர் தசரதன்பால்
வந்தான் வினையி னாக்கனுயிர் மாற்றி முறைகு வரம்பலவுந்
தந்தார் சரிதங் கேண்மினெனச் சாற்றுந் தவத்தி னுயர்சூதன். 34



# நீலவிண்டுவீச்சரப்படலம்.

சுரர்க்கு மாற்றல னாகிய தோல்வியில் வலியோன்
பரக்கு நீக்கட னப்பனே பயின்றிடு மிலங்கை
யரக்க ருயிர் பருகிய வலைகடற் றுயின்று
புரக்கு நாயகன் றசரத ராமனாய்ப் போந்தான். 1

தந்தை யேவலில் வனத்திடைச் சரித்திடு நாளில்
வந்தி ராவணன் சீதையை வெளவின னேக
முந்து மானமுந் துயரமு மொருங்குற முடிப்பா
னந்தி வண்ணாதய மடிதொழு தருண்மிகக் கொண்டான. 2

உடங்கு நின்றதன் னிளவலுந் தானுமொய் யெனச்சென்
றடங்க லாருளம் பனிப்புறு கிட்கிந்தை யமரு
மடங்கு முவிறல் வானரப் படையொடும் வளைந்த
விடங்கொ ளாழியிற் சேதுசெய் திலங்கையிற் புகக்ான. 3

வெம்பு கின்றவல் லரக்கர்தம் விழுப்படை யோடுங்
கும்ப கன்னனை யிராவணன் றனையுயிர் குடியா
வும்ப ரேக்கறு மிலங்கையை விபீடணற் குதவி
யம்புன் கோதையை யுடன்கொண்டு வழிக்கொண்டு மீண்டான. 4

தண்ட மேந்திய கரத்தினா தயங்கிதழ் மடித்துண்
டண்டம் விண்டென வார்த்திடும் வாயினா வெருவக்
கொண்ட வாக்கைய ராய்க்கும்ப கன்னனுங் கொற்ற
மண்டி ராவணப் பதகனும் வளைத்திடக் கண்டான் 5

மாயை யாலிறந் திருமுடன் மரீஇயம ருடற்ற
மேயி னாகொலோ வெனவெரீஇ யையமுற் றவாதஞ்
சாயை யேயிவை தம்மையுந் தாக்குது மென்னா
நாய னாருருச் சேதுவி னிரீஇயந் தெழுந்தான். 6

கொன்னி ராவணச் சாயையே யொழிதரக் கும்ப
கன்ன னோர்வருங் கதழுருச் சாயைகை யகலாப்
பின்ன ரேதொடாந் தலைச்செயப் பிணிப்புறு மனத்தா
னின்ன சாயைமற் றெங்ஙன மிறுத்துமென் றிறப்பான். 7

நங்கை பாகற்கு நிழல்செயு நாவன்மா நகரிக
கைகெகு ரோசமென் றறைந்திடு மெலலையை யடுததான்
பொங்கு காரிரு ளிரவிகண் டெனப்புலாங் தாஙகுத்
தஙகு மேனவன் சாயையுந தணநதிடக கண்டான். 8

விணையென வுடன்றொடர் வெய்ய சாயைநோய
தனையகன் ெறாழிதலுங் தசர தப்பெயர்
புனைமனு மன்னவன் புதலவ ேேறைகயோ
டனையதொன் னகரியி னகததை நண்ணிறைன. 9

திரைசெயுங் காவிரித் தீாதத மாடிபபின்
றரைசெயுந் தவப்பய னெனனத் தஙகிய
விரைசெய்பஃ றீாத்தமும விழைந்து தோய்நதனன
வரைசெய்பொன விலலிமுன் வணஙகி றுனோ 10

அரிககுரற் கிண்கிணி யலைமபுனு சீறடி
வரிககயற் கண்ணகி லாண்ட வல்லியைத
தரிககுமெய் யன்பொடு சாாநது தாழ்நதனன்
பரிககுமுள் ளோகையம் பரவை தோயநதனன 11

கனிவொடுங கோயிலைக் கைய கன்றவண்
முனிவா ரிருந்தவா முன்வ ணஙகுபு
துனிவுசெய் சாயையந தொலைவு கூறினு
னினிதெனக கேட்டவ ரிராமற் கோதுவார 12

தாஙகிய பெரும்புகழ்த் தலனுந் தீாததமு
மோஙகிய மூர்த்தியு முத்த மததன
வீஙகிவ ணலகையே யிராக்க தமபிணி
தீங்கெனப் படுவன யாவுஞ் சோதரா. 13

ஆதலி னீஙகுறு தப்பு றததினே
பாதகப் பழியுருப் பாறிற் றிங்கா
நீதவிர் தரினுறும யாஙகு நீஙகவே
யாதுசெய தககதிங கதுசெ யேந்தலே. 14

செய்யித்தை சிவலிஙகப் பதிட்டை சிந்தையை
வையித்தை யச்சிவன் மாட்டு நீமலா
பெய்யித்தை பேணுமிப் பூசைப் பேற்றினுற்
கொய்யித்தை நினைத்தொடா கொலையை யெனறனா. 15

துறவர்க ளின்னணந் தொகுத்துக கூறலு
மறம்வளர் திருநக ரயோத்தி காவல

னுறவிகல் கடந்தவ னேங்கு பேரருள்
பெறவடிப் பூசனை பேண வெண்ணினான். 16

அங்கதன் றன்னைக் கூவி யருட்சிவ லிங்கந் தானொன்
றிங்குநீ கொணர்தி யாலென் றேவின னிருப்பைச் சூழற்
றங்கிய தீர்த்த மொன்று சந்நிதி தனக்கு மேல்பாற்
பொங்கழ கெறிப்பக் கண்டு போந்தவண் வசித்தா னாக. 17

ஆண்மையின் மிக்க திண்டோ ளங்கத னேகி ஞானக்
கேண்மைமிக் கருளுஞ் சாளக் கிராமமால் வரையைச் சார்ந்து
மாண்மதி யறிவிற் றேர்ந்து மரகத விலிங்கங் கைக்கொண்
டேண்மலி யிராமன் பாங்க ரெய்தினா னிராம னிப்பால். 18

சிற்பநூல் விதியி னாற்றாற் சிவலிங்கத் தளவைக் கேற்பக்
கற்பகிர்ந் தனைய தீர்த்தக் கரையின்மேல் பாங்கர்க் கோயில்
பொற்புற வமைத்திட் டாத்தன் புகன்றநூல் விதியிற் றாபித்
தற்பகங் கனியப் பூசை யாற்றினன் பரச னுற்றான். 19

எறுழ்வன் கணங்கட் கிறையவனா யிமையா ரெவர்க்கு முத்தமனாய்
மறுவில் வலிமிக் காரெவர்க்கும் வலிமிக குடைய வீரனாய்ப்
பெறுதற் கரிய கவிக்கெல்லாம் பிறங்குங் கவியா மைங்கரனைத்
தெறுவல் வினைக டெறவளித்த தேவ தேவன் சரணடைந்தாம். 20

வேத முடியுங் காணரிய விமலா னந்தப் பெருகொளியை
யேத முயிர்கட் கறப்பணிக்கு மெங்கு நிறைந்த பராபரனைப்
போத மகன்றோ ரேகமாய்ப் புசிக்கு மேலாம போகததைச்
சாதல் பிறப்பிற் றலைப்பட்ட தமியே னுரைப்ப தெவ்வாறே. 21

விரியும் வித்தை யனைத்தினையும விளக்கு மிறையாய் மறைமுடிக்கு
மரிய பொருளா யிருந்தாலு மடியாக குரியன் மதிசூடி
பெரிய கருணைத தேவேசன் பிறங்கு நீலப் பொன்மயனாய்த்
தெரிவித் தலினப் பசுபதியைச சிந்தை மகிழப் பழிச்சுவேன். 22

எண்ணி லுயிர்க்குந் தனதருளை யீயும் பொருட்டுப் பலவுருவாய்
நண்ணி யுலகுக் கைந்தொழிலு நடத்தி யந்த வுலகத்திற்
பண்ணி னிசையு மலர்மணமும் பழத்தின் சுவையு மெனநிற்கு
மண்ண லெவனோ வவனடியை யன்பி னாரப் பரசுவேன். 23

ஈச னுடைய தாய்மரண மிரிக்குந் திறத்த தாயீசன்
றேசு விளங்குந் திருமுகங்க ளைந்தி னிடத்துந் திகழ்ந்ததாய்ப்
பேசை வைந்து விதமான பெருமந் திரம்யா ததனையே
பாச வினைகள் பறிந்தோடப் பனுவ லாற்றிற் கணிக்கின்றேன். 24

சத்தியமாய்ப் பரப்பிரமந் தானாகிச் சிவாக்கியமாய்ச் சாந்த மாகி
மெத்திரத மாயேக மாயனந்த ரூபமாய் விளக்கஞ் சான்ற
வுத்தமமா யிருக்குமென வுயர்ந்தவரா லுவந்துரைக்கப் பட்டு நிற்கு
மத்தகுமந் திரந்தனையே யடியேனுஞ் சரணமென வடையா நின்றேன். 25

மாகாய வாசுகிநாண் மாமேருச் சிலைமாயப் பகழி யேந்தி
யேகாத நிலத்திண்டோ கிரவிமதி கோத்தியக்கி யெயின்மூன் றட்டுப்
போகாத புகழ்நிறுத்த புண்ணியனைப் புகழ்க்கால காலன் றன்னை
யாகாச கேசனைமா புருடனைமா கேசுரனை யறியா நின்றேன் 26

ஒளிக்கொளியா யேகமாய்ச் சாந்தமா யாதியந்த மொன்று மில்லா
வளிக்களியாய்ப் பிரமமாய்ச் சிவமாகி யானந்த மயமா யெல்லாந்
தெளிக்குமொரு சித்தாகிச் சத்தாகிச் சதசத்தின் செயிர்தீர்த்த திண்பம
வளிக்குமிறை யெவனந்தத் தேவதே வனபதத்தை வணங்கா நின்றேன். 27

உக்கிரமாயக் கோரமாய்ப் பயங்கரமா யிருக்குமொரு தனுவை விட்டுத்
தக்கபெரு மங்கலமாய்ச் சாந்தமா யிருக்குமொரு தனுவி னாலே
மிக்கபெருங் கருணையினா லெனைக்காக்க வேண்டுமென விமலா வுன்னைப்
பொக்கமிலன் பானறிய பூமுதற்பல பொருள்கொண்டு பூசிக்கின்றேன் 28

கங்கை நதியு மிளம்பிறையுங் கதிர்க்குஞ் சடிலத் திடைவிளங்க
மங்கை யுமையா ளிடப்பாலின் வயங்க வடியேன் பூசைகொள
விங்கண் விரைவி னெழுந்தருளல் வேண்டு மடியா ரிரும்பேறே
செங்கை மலரி னழலேந்துஞ் செல்வா தேவா சிங்கமே 29

பாவிக்கப் படுவானும் பண்ணுரைத் தோத்திரிக்கப் படுகின் றானுந்
தேவர்க்கு மேலாக விருப்பானுஞ் செறியிதழ்த்தா மரையோ னாதி
மூவர்க்கு முதலான நாயகனு மூவரையு முயிர்த்தான் றானும்
யாவர்க்கு மிறையவனும் யாரந்த மகேச்சுரன்மற் றென்னைக் காக்க. 30

சத்தியோ சாத ரெனும்பெய ருமக்குத் தயங்கலாற் றமியனே னீங்குப்
பத்தியாய்ப் பதிட்டை புரியருட் குறியிற் பதிந்துவல் விரைந்தென துள்ளந்
தித்தியா நிற்ப விட்டகா மியங்கள் செறித்திடக் கடவது நுமக்கே
யத்தரே யந்தச் சத்தியோ சாத ராகிய நும்மையான் றொழுதேன். 31

மங்கல மருளு மஞ்சனே தேவ தேவனே மலிந்தவென் பாவ
மிங்குமுற் றகற்றிச் சுகத்தினை யருள்க வெம்பிரா னெனக்கருள் சுரக்க
வெங்கிருந் துனினு மங்கணே விரைய வெழுந்தருள் சொரூபராய் விடையாத
துங்கவெண் கவச ராயுருத் திரராய்த் துலங்கிய நும்மையான் றொழுதேன். 32

உள்ளகக் கமலத் ததைர்ந்தநா யகரே யொளிர்சடை மதியுமி ழமிழ்த
வெள்ளமிக் கொழுந்தனைதிரு மேனி விமலரே யம்பிகேச் சுரரே

தெள்ளொளி யிரவி மண்டலத திருக்குந் தேவரோ திகழொளி மயரே
தள்ளரு மகிழ்ச்சி தலைக்கொள விதயந் தனிலுமைத் தியானியா நின்றேன். 33

இந்தவடி யேன்றன்னை யந்தவுன தருளொழிலா ருனது தாளிற்
பந்தமுடை யவனகப் பண்ணுகமற றதுதாய்போற் பரிந்து காக்க
சந்திரசே கரதேவ சம்போமா திரமன்னந் தலஙக ளான்க
ணந்துவன மனைததினுககும பதியாகு நின்பாத நளினம் போற்றி. 34

கந்தமா றூறு சுவையினு லுண்டி கனியொடு மூட்டுதுஞ் சோமாக்
கந்தராய் விடைமேற் கொண்டெழூந் தருளிக கைக்கொள்க சஙகர னீசன்
சிந்தைமா சகற்றுஞ் சிவனணி மாதி சித்திகள் சேவியா நின்ற
முந்தனு கையனு லெண்குணச் செல்வ முதலிலா முதல்வதந் தருள்க. 35

கருமததா லறுசுவையாற் புத்திரராற் பவுசதிரராற் கவிகை தன்னுற்
றிருவத்தா லணிமாதி சித்திகளான் மனவாககுத் தேகந் தம்மாற்
பருவத்தா லொன்றுனு மடையாத முத்தியினைப் பரம ஞான
வுருவத்தா லடைவிப்பா னெவனவனு கியவுன்னை யுரையா நின்றேன். 36

குறிகுணங காணம் வடிவமா திகளாற் கொளப்படடான் யாவனோ வவனை
மறுவறப் பயின்ற யோகிய ரவனை வாஞ்சையி னறிந்தமாத் திரத்திற்
செறிதரு பவஙகள் விளைத்திடு மலநோய் சிதையயா னெனதெனச் செருககா
வறிஞராய் முத்த ராகுகின் றோரோ வவனையே யெந்தியா நின்றேன். 37

தருகவிழி யிணைச்செவியைத் தருகபிரா ணனைத்தருக தருக வாயுண்
மருவலரைப் புறஙகாண்க மரணத்தைப் போக்குகவெம் மருஙகு மென்பால
வெருவரலென் றபயத்தைக் கொடுககசமு சாரதின் விலக்கி யாள்க
விருடருசத் தாதியினின் றெடுக்கவடி கேணும்மை யிறைஞ்சா நின்றேன். 38

வாளவுணர் நஞ்சொழுகும் வாலெயிற்றுப் பணிபாவம வறுமை நோயென்
றானையிடத் தொடரிடரி னொழித்தாள்க பெருஞ்செல்வ முலவா வின்ப
நாளுமினி தீண்டவருள் சுரக்கதே சினைப்புரக்க நளினம் போதொத்
தாளுமலாத் தாளிணையி னன்பருள்க வமரருககு மமர போற்றி. 39

இராசதவன் குணத்தோடு முலகமெலாம் படைப்பவனு யிருந்தாய் போற்றி
பராவலுறுஞ் சாத்துவிதத் தொடுமுலகம் புரடபவனய்ப் பயின்றாய் போற்றி
விராவியதா மதகுணத்தி னொடுமெழிக்கு முருத்திரனய் மிளிர்ந்தாய் போற்றி
வராகமுத லுருவாயு முகந்தொறும்புல் லாரைவதைக் கின்றாய் போற்றி. 40

யாரொருவன் றன்விரையாக் கலியினல் வெரீஇயியம னிரியா நிற்கும்
யாரொருவன் றன்விரையாக் கலியினு லிரவிமதி யியஙகா நிற்கும்
யாரொருவன் றன்விரையாக் கலியினுற் கடல்கரையி னிகவா நிற்கும்
யாரொருவன் றன்விரையாக் கலியினுயி ருணருமவ னிணைத்தாள் போற்றி. 41

குருதியுமிழ் முத்தலைவேல் குடங்கையணிந் தோய்நினது கோபம் போற்றி
மருவலாகரு நிலையாமை வலையுத விடுநின்கை வாளி போற்றி
யொருவரையு நிகராத கனகவரைச் சிலைவாங்கு மொண்டோள் போற்றி
கருதலரைப் பறந்தலையிற் கடக்கவெனக் குரனளித்த கருணை போற்றி. 42

எவ்வாயுந் திருமுடிக ளெவ்வாயு மொளிநுதலெவ் வாயுங் கண்க
ளெவ்வாயுந் திருச்செவிக ளெவ்வாயுஞ் செவ்வாயெவ் வாயுந் தோள்க
ளெவ்வாயுந் திருக்கரங்க ளெவ்வாயுந் திருவயிறெவ் வாயுந் தாள்க
ளெவ்வாயுந் திருமேனி யெனநிற்குந் தனிமுதல்வ னெமமைக் காக்க. 43

எம்பெருமான் திருவடிப்பூ சனைபுரிந்து மேதமெடுத்து மிருண்ட பாச
நம்பிநருக் கறுத்தருளு நாமத்தை நாவார நவின்று மேலாஞ்
செம்பொருளாசோ புகழ்க்காதை செவிமடுத்துந் திருமேனி திகழக் கண்டு
மம்புவியி னிருக்கினரு மடியேமை யீன்றவாபோ லருளிக் காக்க. 44

அஞ்சலென வமைத்தவொரு கரதலமும் வரதமென வமைத்த கையுங்
கஞ்சமல ரேந்துமிரு கரதலமு மூறறிருக்குங் கருணை நோக்கும்
பஞ்சிகமழ் சீறடியு மழகெறிப்ப வணிகலன்கள் பலவுந் தாங்கி
வஞ்சமல விருள்சீக்கு மகிலாண்ட நாயகிதன் வடிவம் போற்றி. 45

என்றி ராம னியம்பிய தோத்திரம் யாவையு
நன்று சென்று திருச்செவி யேறலு நாதனார்
மன்ற லோதி மடந்தையொர் பாகம் வயங்குற
வென்றி மால்விடை மேல்வெளி நின்றனர் காணவே. 46

கண்ட கண்கள் கவிழ்க்கு நறும்புனல் கால்செயாக்
கொண்டன் மேனிக் குரூஉக்கவ யம்பெறு சீறநினை
வண்டலை செய்யக் கரைந்து கரைந்துவ ணங்கினு
னண்டர் கோனருள் கூர்ந்தவற் கீதுரை செய்யுமால். 47

இராம நீயெமை யேத்திய தியாவாக ளேத்தினும
பராவி யன்பொடு கேட்பினும் பல்பெரும் பாவமும்
விராவு தீயிடைப் பஞ்செனை வெந்தவி யப்பெருந்
தராத லத்துயர் வாழ்வுந் துறக்கமுஞ் சார்வரே. 48

அடரும் வல்வினைச் சாயையு நீங்கி யயோத்திபுக்
கிடாது ரந்துபன் னுளர சாண்டிருந் தெய்வமாய்த்
தொடரு மாந்தர்க்கு வேட்டவ ரங்கடு றுத்திருள்
விடவு யாந்தநன் முத்தியை யந்தத்தின் மேவுதி. 49

சிறந்த மன்னவ செல்லுதி யென்று சிவபிரான்
மறைந்த னன்சிவ லிங்கத்தி ராமனும் வல்விரை

தறந்த ழைத்திடு பூசனை முற்றற வாற்றிப்போ
யுறைந்த னன்னுல காண்டுதன் னூராவயி னெனபவே. 50

நீல விண்டுநி கழ்த்துமெய யன்பொடு பூசனை
சால வாற்றிய நீலவிண் டுப்பெயர்த் தாணுவை
ஞால மீதுப ணிந்தவர் நாயக விற்றிஞோ
கோல நோக்கினர் தாமுங்கொ லைப்பழி தீரவே. 51

கையா சாயை காக்குங் கரியமா லீச்சர
மைய சொற்றனை மாங்குப பராசர னங்கியிற்
பொய்ய ரககரைப் பொன்றிய காதையுங் கேண்மினென
றுய்ய வையக மோதுத லுற்றனன் சூதனே. 52



# பாராசரன்வழிபடுபடலம்.

சுந்தர மிகுந்தபொன் னகரிற் ருலைநா
ளிந்திர னரசுவீற் றிருக்கு மண்டபத
தந்தரத தமரரு மறிஞா யாவருஞ்
சிந்தையின் மகிழ்கொளச் சென்று தொக்கனா. 1

உ த்தம வசிட்டனு முபாந்த விசுவா
மித்திர முனிவனு மேவி வைகினு
ரத்தலை யுள்ளவ ரவனி மாட்டெவா
பொயத்துவை யாதவ ரென்ற போதரோ. 2

மந்திர வசிட்டனமன் னவாக்கு மனனரிச
சந்திரன பொயசொலா னென்று சாற்றினுன
வெந்திறல விசுவா மித்தி ரன்முரண்
சிந்தையன் பொய்சொலச் செய்வ லெனறனன 3

வேந்தனொருு பொயமொழியின விசுவா மிசதிரனே
காந்துமணி முடியமரா கரிகணடா யடுநரு
மாந்தியவந் தணனபோல வாாதுகிலொன றுடுத்தியமன
பூந்திசையின முகநோக்கிப் போதுவலென் ருன்வசிட்டன. 4

தஞ்சமறை பயில்வாயாற சபதமிட வசிட்டமுனி
வெஞ்சினநீள் விசுவா மித்திரனும் விறலவேந்த
னெஞ்சறிந்தே பொய்மொழிய ங்கழ்ததேனே ஸீயுரைதத
வஞ்சினமற் றெனதாகு மெனக்கிளந்து வான்விடுத்தான. 5

பூதல மருங்கு போந்து புகழரிச் சந்தி ரன்பா
லேதமெத் துணையு மாற்றி யியன்மொழி மெயயிற் றீரா
ஞுதலை யறிந்து தோற்று னரசனுக் கமர ரெலலா
மேதகு வரங்க ளீந்தா வேந்தனும் வணங்கிப் பின்னா. 6

கடவுளீ ரறிவன் முன்னாக கதழ்ந்துரை சபதந் தன்னை
யடியனேன் பொருட்டுச் செயயா துதலே வேண்டுமெனனப்
படர்பெருங் கருணைத் தேவா பாாத்திபன் புரிவு நோக்கி
மடனறு முனிவன் சொன்ன வஞ்சினம் புரிய லென்றா.

விரைசெறி கற்பத் தண்டார் விண்ணவா வரங்கள் பெற்ற
வரசனங் ககன்று ஞெணஞ் சலைத்திட வசிட்டன் றன்பா
லுரை செறி விச்சு வாமித் திரனுறு சீற்றங் கொண்டு
புரைசெறி வேள்வி யொன்று புரிந்தனன் மனுக்க ளோதி. 8

வெருவரு தோற்றஞ் சான்ற வெந்திறற் பூத மொன்ற
கருவரை யென்ன வேள்விக கனல்கெழு குண்ட நின்று
வருதலு மதனை நோக்கி வசிட்டனைக் கோறி யென்று
னுருவவல் லரகக ஞகி யொய்யெனச் சென்றப் பூதம். 9

அருந்தவ வசிட்ட னந்நா ளியல்பினுச சிரம நீங்கி
யிருந்தன னனையான் மைந்த னியற்பெயர் சத்தி யென்பான
பொருந்தனை தாயிலக் கண்டு பொள்ளெனக் கொன்று மீண்டு
திருந்திய விச்சு வாமித் திரனுள மகிழ்செய் தன்றே. 10

அருந்துதிக கற்பின் மிககா ளவன்மனை மாது நோககி
வருந்திமிக் கழுத லோடு மருங்குளாா தாமுங கூடிப்
பெருந்துய ருழக்கு மேல்வைப் பெருந்தவ வசிட்டன் போந்து
கருந்துய ருழந்து சோகக கடலிடை யழுந்தி ஞுல். 11

ஏந்திதழ்க் கமலச் செம்ம லிம்மென வகுப் போந்து
வேந்தவ னென்ன வீழ்ந்த விழுததவ வசிட்ட னெஞ்சி
ஞுந்துய ரகலத் தேற்றி யறைகுவான் சத்தி யாவி
போந்தன னென்று சாலப் பொருமிமிக் கவலஞ் செயயேல. 12

நுன்குலம் விழுப்ப மெய்த நுன்னுடை மருகி மாட்டு
நன்கரு வாய்ந்த தன்றே நற்றவ வஃதா ஞகும்
பின்குல வரக்கர் தம்மைப் பெயரொடுங் கெடுககு மன்று
டன்குலச் செவிகள் கேட்ப மறையெலாஞ் சாற்று கென்றுன். 13

மறையவன் றேற்றத் தேறி மருங்குளார் தம்மைத் தேற்றி
நிறைகுண வசிட்டன் சத்தி நேரிழை மனைவி கேட்ப
முறையுளி வேத மெல்லா மொழிந்தன னவற்றை யெலலா
முறைதரு வயிற்றி னின்றே யுணர்ந்ததக் கருவிற் பிள்ளை. 14

ஐயிரு மதியு முற்ற வகட்டுறு கருவி னீங்கி
வையக மிடருு நீங்க வானக மகிழ்ச்சி துன்ன
வெய்யவல் லரககர் தேய மிக்கநெய்த் தோரின் மாரி
பெய்யவந் துதித்த தென்ப பிறங்கெழிற் குழவி மாதோ. 15

தன்னிகர் வசிட்ட மேலோன் சாதக முதல வாற்றிப்
பன்னிரு நாளி ஞமம் பராசா னென்று சாற்றிப்

பின்னுப நயன மெட்டா மாண்டினிற் பிறங்கச் செய்தான்
மன்னிளா மதியம் போல வளர்ந்திடு மைந்த னோர்நாள். 16

தாய்முக நோக்கி யன்று தவ்வென விருத்தி மெய்யி
னய்மணிக் கலனே காணு மவலமோ நின்பாற் கண்டாம்
வாய்மையி னுரைத்தி யெந்தை யாண்டையன வசிட்டன் யாவன்
றூய்மைநெஞ் சயிர்ப்பி னீங்க வென்றலுஞ் சொல்லு மன்னே. 17

கொழுகொம் பிழந்த கொடியேபோற் கொழுந னிழந்தேன் பருவாலே
முழுது மகற்ற வந்தகய முனியே முனிவா செல்வமே
பழுதொன் றியற்று நுந்தையுயிர படர்ந்தோ ராக்கன் பருகினான்
வழுவில் வசிட்டன் மூதாதை மதியா யென்று மறுகினாள். 18

தன்னாய் மறுகி மூர்ச்சித்துத தளர நோக்கி முனிச்சிறுவ
னன்று வன்று வெனப்பல்கா லங்கைகத தளிராற் புடைதெழுப்பி
யின்று விணைசெ யரக்கர்குல மின்னே யிறுத்தே னெனவணங்கிக்
கொன்று தரவி னருள்பெறறு வசிட்டன் விடையுங கொண்டெழுந்தான். 19

கள்ளம் படருங கருத்தினர்க்குக காண்டற் கரிய தனிமுதல்வன்
வெள்ளம் படருஞ் சடைக்கற்றை விமலன் ஞான தலமெய்தி
வள்ளம் படகின் றலர்கமல மணங்கேழ் தீர்த்தம் பலதோய்ந்தங
குள்ளம் படரும் பேரன்பி னொளிரொற் கோயி னண்ணினான். 20

ஆனே றுயர்த்த கொடிப்பாங்க ரகநெக் குருக விழுந்தெழுந்து
மீனே றுயர்த்த கொடிக்காளை வேவ விழித்த பூரணனை
மானே றுயர்தத கரதலத்து மணியை வணங்கி மறைபாடி
யூனே றுடம்பின் பயன்பெறுவா னுலக முயிர்த்தா ளையும்பணிந்தான். 21

அங்க ணகன்று கோயில்வல மாகப் போந்து புறத்தேகித
துங்க மறையின் விதியாற்றுற் றுவன்றும் பிதிரா களிதூங்க
வெங்க ணரக்க ஞலாவி விளிந்த தாதை தனைக்குறித்துத்
தங்கு கரும மனைத்தினையுந் தழைத்த வன்பி னியற்றினான். 22

நொறில்வெள் விடையின் கொடிமேலா னுடங்க விளங்கும் விமானத்திற்
செறிபல சிறப்பி னொடுமெதிரே சென்று தாதை செப்புவா
னறிவி லரக்க னுல்விளிந்த வலகில் பாவத் தொடக்கினாற்
பிறிவி லலகை யாயின்னல் பெரிது முழநதே னிதுகாறும். 23

இன்று சிறுவ நீயிந்த ஞான தலத்தி னினிதியற்று
நன்றி வினையாற் றீவினைக ணமுவ வினைய னுயினேன்
சென்று சேர்து மெனவெழுந்து சிவலோ கததை யவனடையப
பின்றை யரக்கர் குலந்துமியப் பிறங்கு வேள்வி தொடங்குவான். 24

கடவுள்வெண் ணாவலங் காமர் நீழல்வாழ்
படவர வணிந்தருள் பரமர் கோயிலின்
வடகிழக் கெல்லையின் வயங்கு குண்டமிட்
டடைவுற வியற்றினு னவி சாரமே. 25

செந்தழ லாகுதி தேககு செவ்வியின்
மந்திரஞ் சென்றுவல் லரக்கர் தானவா
வெந்திறற் பூதவே தாள மியாவையு
முந்திவந் தொளிரழற் குண்டத திட்டவே. 26

தினந்தொறு மந்திரந் றீயிற் றீயாத
மினங்கெட விறுத்துத்தென் மேற்கி னெய்தினேன்
மனந்தளர் வுறவவன் வாகை வாகனக
கனங்கெழு பூதமுங் கலங்கப் பற்றின. 27

பொருதெறுழ் வலிகெடும் பூத நோக்குபு
நிருதியும வலியினு னீக்க மாட்டிலன்
றருநய மொழிபல சாற்ற வும்விடா
துருவமந் திரமவ னோடு மீர்த்தவே. 28

நெஞ்செலா மழிதர நிருதி யென்பவன்
றஞ்சம்வே றிலையெனச் சம்பு நீழல்வாழ்
செஞ்சடா மகுடர்தஞ் சேவ டித்துணைக
கெஞ்சுரு வன்பினு லேத்தன் மேயினன். 29

பாலனுக் காகக் காலன் படவுதை செய்தா யோல
மாலமுண் டமர ராவி யளித்தரு டலைவ வோலம்
வேலனு லவுணர்க் காய்ந்து விண்குடி நிறுத்தா யோலஞ்
சீலமா சம்பு நீழற் சிவபிரா னேலை வோலம். 30

பிரமனை மாய னோர்காற் பெறவர மளித்தா யோலம்
பிரமன்மா யவனை யோர்காற பெறவர மளிததா யோலம்
பிரமன்மா யவனைப் பல்காற் பெற்றளித் தழிப்பா யோலம்
பிரசமார் சமபு நீழற் பிஞ்ஞகா வோல வோலம. 31

முப்புரம் பொடித்த மேரு மூரிவெஞ் சிலையா யோல
மப்பவிர் வேணி வைத்திட் டகனிலம் புரந்தா யோலஞ்
செப்பிள முலையாள் பூசை செய்தநீர்த் திரளே யோலம்
வைப்பெனச் சமபு நீழல வதிந்தருண் முதல்வா வோலம். 32

ஐம்புல னீர்க்கப் பட்ட வார்வநெஞ் சுடையார் போலப்
பம்புமந் திரங்க ளீர்ப்பப் படுகின்றே னேலை வோல

நம்புறு துணைவே நிலவே நாயக வோல வோலம
வம்பலர்ச் சமபு நீழல வானவா வோல வோலம. 33

ஒருகணந தாழ்ககி ஞயே னூாதியோ டறவ ஞற்றும
வெருவரு வேள்வித தீயின வீழ்வது திண்ண மோலங
கருணையி னெளிவந தெமமைக காபபது கடன்மை யோல
மருவளர் சம்பு நீழல வள்ளலே யோல வோலம 34

சாலுமெய் யன்பினு ணிருதி தாழந்துமிக
கோலிடத திருவுள முவநத நாவலின்
கோலவெண் ணீழலிற் குழக ஞணையா
லெல்வுற வாணினூ டெழுந்த தோருரை. 35

நிருதிதன் பூதவா கனததை நீயிவண்
டருமதி யெமகெனத தழஙகும வான்மொழி
யிருசெவி நுழைதலு மிரும்ப ாசரன்
மருவிய வுவகையன வான நோககினுன். 36

பூதமு நிருதியும பொள்ளென் றண்மையிற
போதலு மவாதமைப் புடையி ருததினு
ஞதரு வஞ்சின மதனின வேள்விமுன்
னீதலே சிறப்பென வியைநது ளேனென்முன் 37

ாந்தனே னென்னுமு னிணாதத நாவலி
னூாந்ததண் ணீழலி னமாநத நாயகன்
சாநதமென் முலையுமைத் தயலொ டேற்றினமேற்
போந்தனன் விசும்பிடைப் புலவர் போற்றவே. 38

கண்டன னெழுநதனன் கரங்கள் சென்னிமேற
கொண்டன னுடினன் குவல யந்தனிற்
றண்டென விழுந்தன னெழுந்து தட்டமிட்
டண்டாநா யகன்சர ணன்பி னேத்துவான். 39

ஆதிப் பெருஞ்செல வவருட் கடலே யடியா ரிளைப்பா றுமலர்த் தருவே
பூதிக் கவயத் திருமே னியனே புரமூன் றமெரித தபுரா தனனே
காதிப் பழவல் வினையைச் சிறியேன கருதா ரையுநீற் றியகண் ணுதலே
சோதிப் பொருளே தொழுவார பருகுஞ் சுடாவா னமிழ்தே சரணஞ் சரணம. 40

ஆரு டியவே ணியின்மீ மிசைமிக் கமிழ்தா டியவெண் மதிக்கண் ணியனே
பாரு டியமுத் தலைவே லவனே பழியா டியவெண் டலைமா லையனே
கூரு டியகோ மளவல் லியனே குன்ரு டியகொற் றவிலங கையனே
வீரு டியவெள் விடைவா கனனே விண்ணோ ரிறையே சரணஞ் சரணம்.

நவதீர்த் தமுமா டுபயன் செறியு நவசா ளரசந் நிதியா சரண
மவநீங் கறலா டவிதித் தபொரு ளாறைந் தெனவே யறிவித் தொருபா
லிவர்மாட் சியின்முப் பதுசா ளரங்கின் றிலகுந் திருகோ யிலுளாய் சரணந்
தவநீ டியசம் புமுனிக் கருளுந் தனிநா யகனே சரணஞ் சரணம். 42

ஆரந் தொடையான் மனையாள் களநீங் காரம புனலோ டுகுடத் துநுழைந்
தீரந் திகழ்சென் னியினூட் டுபொழு திலகுந் திருமே னியணிந் தருளி
வாரந் தருநல் லருள்வைத் தவனே மணியே மலாயம பியகா விரியின்
றீரந் திகழ்கள் ளிடையே வதியுஞ் சிவனே பவனே சாணஞ் சரணம். 43

உழுவ லன்பிற் பராசரனென் றுரைக்கும் பெயரா னிவ்வாறு
பழுதில் புகழ்கள் புகழ்ந்திறைஞ்சப் பாய்வெள் விடையே லெதிர்நின்ற
முழுது முணர்ந்த நாயகனார் முனிவில் வரங்கள் கொள்கென்றார்
வழுவின் முனிவன் மீட்டெதிரே வணங்கி வரங்கள் வேண்டுமால். 44

மன்ற வடியேன் புரிவேள்வி மணிச்சா லையிற்றென மேற்றிசையி
லொன்று நிருதிக் கெழும்பூத முதவும் படியில் கருணையா
லென்று நினக்குப் பச்சாதா பேச னெனும்பே ரினிதுறுக
வென்றி விடையாய் நினதாளின் வீயாப் பத்தி யெனக்குறுக. 45

எனமா தவத்துப் பராசரன்மற் றிரந்த வரங்கள் கொடுத்தருளித்
தனிநா வலின்கீழ்ச் சிவலிங்கந் தன்னி லிறைவ னமர்ந்திருந்தா
னனிநா னிலத்தி லன்றுமுத லென்று நாவ னிழலுடையாக்
கினிதாம் பெயர்தான் பச்சாதா பேச னெனவு மிலங்கியதே. 46

கருணைப் பெருமா னருள்பெற்ற காளை முனிவன் மகமுடித்துப்
பொருவில் வரங்க ளொடுந்தாதை தாதைப் பாங்காப் போய்வாழ்ந்தா
னிருதி பச்சா தாபேச ரளித்த நீடு பூதததின்
மருவு தனது திசைசென்று பண்டு போல வாழ்ந்திருந்தான். 47

மல்குந் தவத்து வசிட்டமுனி மருமான் வழிபாட் டினைப்புகன்று
நல்குந் திருமான் ஞானதல மெனவாங் கிருந்து நாடோறும்
பல்கும் பயன்றந் திடுமாறும் பண்பிற் கேண்மி னெனச்சூதன்
புல்குங் குணத்து முனிவார்க்குப் புரிந்து புகறன் மேயினான். 48



# திருமால்வழிபடுபடலம்.

வானவாக கிடையூ றுற்று மறமலி யரககர் சேனை
வானரப் படையாற் றுக்கி வண்பகை கடந்த யோத்தி
தானமர்ந் தரசு பூண்ட தசரத ராமன் பாங்கர்
வேனவில் கடகத திண்டோள் விபீடணன் விடைகொள் காலை. 1

திருமறு மார்பத் தண்ண றிருவுரு வொன்றுஞ் சிறபத்
துருவளா விமான மொன்று முவந்தவ னளிப்பக் கொண்டு
மருவிய வயோத்தி நீங்கி மனனிய விலங்கை சேர
வெருவருந் தானை யோடும் வியனில நெளியச் செல்வான. 2

கண்ணுத லமர்நத தானங் கண்டன பலவும் போற்றிப்
பண்ணையும் வரையுங் கானும் பற்பல நீந்தி யென்றூழ்
விண்ணவ னுச்சி யெய்தும் வேலைவெவ் வெரிவாய்க் கும்பி
நண்ணிய தனைய தாங்கோ ரனநதலைப் பழுவஞ் சார்ந்தான். 3

உருததி ரப்பெய ராண்டகைக் கொன்னலார் தம்மை
வருத்த மிக்கெழும் வெகுளியந் தழலவா மடிந்தும்
பெருதது நிற்பமற் றதுதனைப் பெயாதவெழுந் தோறு
மிருததி வைக்குமோர் வைப்புமா யிலகுமச் சுரமே. 4

மாய ணாதிப்பல் லுயிர்களும வளரிளைப் பாற
வாய மாயையின் காரிய மனைத்தையும் விழியாற
காயு நாளையிற் சூற்படைக்*கடவுணின் றுடுந
தூய வாரழற் கானமுந் துணைவதக் கானம. 5

கங்கை வான்மதி சூடிதன் கரத்திடை முனிவ
ரங்கி சேர்ந்தது மாழியில் வடவைசார்ந் தழுஞ்சீ
பொங்கு மாதவன் வைகலும் புணரிமூழ குவதுந
தங்கு தீச்சுரந் தழற்றுதா பநதபும் பொருட்டே. 6

தூல தேகமே யன்றிவண் சூக்கும வுடலுஞ்
சால நீற்றுவ தனையது தழல்பரந் தொழுகிக்
கோல மார்தரு மராமரங் குழையடை யிருப்பை
பாலை யாதியுங் கரிந்திட மேயதப் பழுவம்.

உடைந்து சாரவட வைததழற் குதவிசெய் வாமென
றடைந்து சாகரம் போர்த்ததே யனையது வெண்டோ
மிடைந்த தீச்சுரம் வெதுப்பலின் மேவிய புணரி
யிடைந்து ருவகை பதைப்பதே பொருமத னியககம 8

விரிந்த பூதலம் விண்டது விண்டவாய தோறுஞ்
சொரிந்த தீததிர டுவெண்டன பாதலத துரகம
பொரிந்த மானினம் பொடிநதன வுலடகளபுள ளினஙகள
கரிந்த நீறின காயமா மழையுநே ரியஙகா. 9

தழலே யல்லது பிறிதொன்றுந தன்னிடைக காட்டா
தழலும் வெஞ்சுர மடுத்தவண சேனைக ளோடு
கழிபெ ருந்துய ருழந்தது கடநதுசெல காலை
விழைத குமபுனற் காவிரி விளஙகுறக கணடான. 10

நரக வெந்துய ருழந்துவிண் ணண்ணினு ரெனவுங
குரவ மல்கிய கொன்றையான கோபததி னவிந்து
விரவி யன்னவ னருடர விளஙகினு ரெனவும
பரவு தண்புனற் காவிரி நன்னீறப் படாந்தான். 11

தரஙக வார்நதி தவழ்நறுந் தெனறலசாரந் துலவக
குரங்கு சாகையங் குளிர்நிழற் பொதும்பரிற் சடலபோ
விரஙகு தானையோ டெய்தினு னிருந்தயா வுயிாததான. 12
புரஙகொல் சேவகன் றிருவடி நீழலபுக காபோல.

கார்த்த பூம்பொழில் கலநதயா வுயிாத்தபி னரகக
னுர்த்தெ ழுந்துசெல் காவிரி யளிபுன லாடிச
சீாத்த வெண்பொடி கண்மணி திகழமெய யணிநது
கீாத்தி மேமபடுங கேசவன் பூசையும புரிந்தான். 13

பூசை முற்றுறப் புரிந்தபின் புயனிறத் தவனேக
காசு மல்கிய விமானததுக கதுவுவித் ததனைத
தேசு மல்கிய வெக்கரி விருததினன் சிறப்ப
வாசை மல்கிய வறுசுவை யடிசிலு மயின்றான் 14

இலஙகை மாநக ரினிப்புகு வாமென வெழுந்திட்
டலஙகன் மார்பகந் துயலவர விமானத்தை யடுத்து
வலஙகொ டோளினுற் பெயர்த்தனன் மற்றது பெயரா
நிலங்கொ ணேன்றிய தறிந்தன னெடுந்துய ருழந்தான. 15

கவலை யுற்றவ னிருந்துழிக கனவிடைத் தோன்றிப்
புவன முண்டவன் விபீடண கேளெனப் புகல்வான்

சவலை நெஞ்சினை யுடையையாய்த் தளரலை யிருந்த
வவனி ஞானகேத திரமென வறைந்திடப் படுமால். 16

அகில லோகமு மளிப்பவ னருந்தவம் புரிந்து
நிகரி லாதமெய்ஞ் ஞானநின் மலனுறப் பெற்றுப்
புகரெ லாங்கெடுத் துயிர்க்கெலாம் புகன்றபல் வரமு
மிகவில சீர்த்தியோ யினிதளித் தருளுவதிவ் விடமே. 17

சம்பு மாதவன் பராசரன் முமறைக் கிழவன்
கும்ப மாமுனி தினகரன் குளிர்மதி யிராம
னும்பர் கோனழற் கடவுளென் றிவர்களெலா முவந்து
தம்பி ரானரு டழைத்தரக் கொடுத்ததித் தலமே. 18

மூர்த்தி மேன்மைமிக் குடையது மொழிந்தவித் தலமே
தீர்த்த மேன்மைமிக் குடையதுஞ் சிறந்தவித் தலமே
கார்த்த கண்டனா காதலசெய் பலதலத் துள்ளுங்
கீர்த்தி போதத்துமேம் பட்டதுங் கெழீஇயவித் தலமே. 19

மறையின் வாரபுனற் பொன்னனியின் ஞானகேத் தீர்த்தின
மிறையி னீங்கியி லாணடநா யகியின்மேம் பட்ட
முறைசெய் ஞானதி தலமுமூர்ச் சத்தியு மில்லை
யிறைசெய் நாவலின மூர்த்தியின மூர்த்தியு மில்லை 20

ஏனை வைப்பிடை யெம்பிரான் றனதொரு கூற்றுற
றூன மாந்துபல் வரங்களுந் தழைத்தர வழங்கு
மீன முற்றற முழுவது மித்தலத் திருந்து
ஞான மறைய பொருள்களு நலைத்தக வழங்கும். 21

திங்கள் சூடினா சிவணிய சிவதலந் தோறுந்
தங்கி நாளுமென் கூறறினூற் றூழ்ந்துவாழ் யானு
மிங்க ணொடாறு முழுவது மிருந்துவெண் ணுவற
பொங்கு நீழல்வாழ் புனிதரைப் போற்றிட வலிதேன. 22

கள்ளு மிழ்ந்தலர் கொன்றையங் கண்ணியான் கருணை
கொள்ளை கொள்ளுவான் குறித்தருந் தவத்தினிற் கூர்ந்து
விள்ள ரும்பெரும் பத்தியின விழைந்திருக் கின்றூண்
முள்ள ரைச்செழுந் தாமரை முற்றிலக் குமியும். 23

ஈங்கு வாழ்தலே யன்றிமற் றிலங்கையிற் படரேன
நீங்கி லாநட மிலக்குமி செய்யுமா றியக்கி
யோங்கு நாவலி னொருவனா திருவருள் பெற்றுந்
தாங்கு மார்வமுந் தழுவிய நெஞ்சினேனை கணடாய்

திருவின் மாதரா ளுடைகஞ் செய்யுமித் தானத
தருவ மாநக ரொன்றுசீ ரங்கமென் றுளதா
மருவு சீரங்க நாதரென் றெமக்குரை வழங்கும
பொருவில் பூசனை விழாமுத லெமக்கிவட் பொலியும். 25

ஆண்டு தோறுமிங் கடுத்துநீ யெமதடி மலரு
மீண்டு நாவலி னிறைவனா பாததா மரையும்
பூண்ட வன்பினுற் போற்றுதி போதுதி யென்று
நீண்ட மாதவ னிகழ்ததினன் மறைந்தனன் மாதோ. 26

கனவினை நனவெனக் காதல் செய்தெழுந்
தனகனை யானைக்கா வகத்துப் போற்றிப்போய்
வினைதப வீடணப் பெயரின் மேயினுன்
றனைநிக ரிலங்கையிற் சார்ந்து வாழ்நதனன். 27

ஆயிடை வதிவதே யாத ரித்திடு
மாயனு நாவலின் மருங்கு வைகிய
நாயகன் பூசனை நயநது தன்னுயிா
நாயகி தனைநட நவில்வித் தானரோ. 28

பதுமைநன் கியற்றிடும் பரவை நோககுபு
கதுமென நாவலிற் கலந்த கண்ணுதல
விதுவணி சடைமுடி விளங்க முன்னுறீஇ
யெதுவரங கொள்கென விறைஞ்சி மாதவன் 29

நின்னடித தெரிசன நிச்சம் யான்புரிந்
தின்னவல் வினையெலா மிரித்தல் வேண்டுநீ
மன்னிய சடைமுடி வள்ளல் யாவரு
மென்னிடை வரம்பல வெய்தல வேண்டுமால. 30

விழாமுதற் சிறப்பின்மேம் பாடு வைகலும்
வழாவகை யெனக்கிவண் வளர்தல் வேண்டுநிற்
றொழாதவர் மாட்டுறுத் தொடிக்கை மாமகள்
குழாமலி நாடகங குயின்ற வைப்பிது. 31

சீரங்க நகரெனச் சிறத்தல் வேண்டுமா
லோரங்க மிரிய லான வுத்தம
கூரங்கி நிகருருக் குழக வென்றனன்
பேரங்க மறையினுன் பெறுக வென்றனன். 32

சம்புநா யகனரு டாங்கி மாயவ
னும்பரார் விழைதக வோங்கு சீரங்கப்

பைம்பொன்மா மதினகர் பயிற்றி வைகிறு
னிம்பர்வா ழனைவரு மின்ப மெய்தவே. 33

நெடியவன் வழிபடு நிலைமை கூறினஞ்
சுடர்மணி யாரமுன் சோழன் சத்திய
வடைவிளி யறிந்தவா றறைது மாலென
விடலரு கருணையால் விளம்புறு சூதனே. 34



# ஹாரஞ்சாத்துபடலம்.

சிறந்த பொன்னி வளஞ்சுரப்பத் தெய்வங் கமழுந் தீம்புனறு
டறந்தங் கியவே ழேயநாட்டுக் கணியாய விளங்கு மாறேபோற
புறந்தங் கிடுபல் லூர்க்கெல்லாம் போற்ற வணியாய் நனிவிளங்கு
முறந்தை நகரின் வீற்றிருந்திட் டுலகம புரக்கு மொருசோழன். 1

அகன்மா நிலத்தைப் பொதுநீக்கி யாண்டு திகிரி திசையுருட்டி
யிகன்மா ணரையா பகைமுருக்கி யிசைமிக் கீட்ட லேயன்றித்
தகையா ணவத்தின் பகைதனையுஞ் சவட்டி ஞானப் பொருளீட்டிப்
புகலீச் சுரனே யெனவவாதம புரைதீா பணியிற் றலைநின்றான். 2

நிசுளா புரியென் றுலகேத்து நிகரி லுறையூர் முதலாகப்
பசுவே றுயர்த்தார் தலந்தோறும பரிந்து பூசை விழாவாதி
திசையோ டொட்டுங் குதுகலிப்பச் செய்து வருநாட் பனிப்பருவம
பசைதீர்ந் தொழிய விளவேனிற பருவ மொன்று படர்ந்தன்றே 3

அறிஞர் தம்மை யடுத்தவரு மறிஞ ரேபோ லுயிாக்கிதமே
செறிய வுதவி செய்கின்ற திறத்தை விளக்கு மாபோலக்
குறிய முனிவன் பொதியவரைக் குலவு தென்றன் மென்குளிரு
நறிய மணமுந் தழீஇயெவரு நயப்ப மெல்லத் தவழ்ந்ததே. 4

பேணுங் கழைவில் விறைதனக்குப் பெருநா ளடுத்த தெனமகளிா
பூணுந் துகிலு முதலான புதிய வணிவ தறிந்தின்பங்
காணும் பனிப்பூம் பொழிருமுங் கவின்கொள் வனபோற் சாகுதிர்த்து
மாணுந் தளிர்மெல் லரும்பாதி வரிசை யாக வுயிர்க்குமால். 5

தேனார் பலமா மலருள்ளுஞ் சிறந்த கமல முதன்முருக்கு
மானாப் பகைமைப் பனிப்பருவ மகலச் சிவந்த சிவப்பேபோல்
வானார் சினைமெல் விணர்தெய்வ மகளிா முலையோ டமராடுங்
கானார் சோலை மாமுழுதுங் கவினத் தளிாத்து வயங்கினவே. 6

தம்மை வணக்கு மெழில்வாய்ந்த தையன் மடவா ருளம்வணக்கச்
செம்மன் மதவேள் விழாக்கொண்டு செருச்செய் கால மிதுவாமென்
றம்ம வவன்மிக் கமரொழியா தாற்ற மலர்வா ளிகளனந்தம்
விம்ம வுயிர்த்த வானிழன்ற விரைசூழ் பொதும்பர் தொறுங்கொம்பர். 7

செய்ய தளிரி னிடையிடையே தீந்தேன் மலாகள் பலநெருங்கல்
வைய முழுதும் பணிகேட்ப வாாந்த கருப்புச் சிலைகோட்டி
யெய்யு மதவேள் கணைகூர்மை யியற்றப் பருவ மெனுமகொல்லன்
வெய்ய வுலைவெந் தழலிடையே விளங்கத துறுத்த பரிசேய்க்கும். 8

நிச்சமுமென் றா மூன்ப னெருககுமட பகைமீக் கொண்டு
நச்சன பனிக டாகக நலிந்ததா மரைபின் வெய்யோன்
வெசசென முழுது யாற்றி மேமபட நோககி நோககிக்
கச்சமின் மகிழ்ச்சி பொஙகக் கஞலின கயங்க டோறும் 9

ஆடவர் குழாஙசண் மாட்டு மருப்பிளங கொஙகைச் செவ்வாய்த்
தோடவிழ் மலாமென் கூந்தற் றேரைையர் மாட்டு மார
னேடவிழ் மலரின் வாளி யெய்யும்வாா சிலைநா ணேறைை
யீடுகொண் டாாப்ப போலும் பிரமரத் தழுனி யீட்டம். 10

மலாதொறும் வண்டு பாய்ந்து வண்டுக ளுகுததுச் செந்தே
னலநுகர்ந் துழகுக தோற்ற நாயவே லமர ரென்னுங்
கலதிசெய் தெவ்வா வாழுங் காமரில் லகமிவ் வென்றே
வலனுய ாவுணா கூடி மாணின்மை புரிவ போலும். 11

காமரு துறகக வைப்பிற் காாவா ச சென்ற வன்னங்
தாமரை வளஙகூர் காலஞ சாாந்தசென் றடுக்குந் தோற்ற
மேமரு மிளைய வேனி லினபஙக ணுகரத் தாமும
வீமலி கற்ப நாட்டு மெலவியர் வருதல் போலாம. 12

இசைமொழி யாதி வெவ்வே றிடமபொரத தருவின் மாட்டும
பசைசயொடு வதியும் வாணி பண்ணொடு பயில்வ தேபோ
னசையொடு மகிழ்ச்சி பொங்க நலத்தகு கலைக ளெல்லாம்
வசையறு கிள்ளை பூவை வயக்குவ சோலை தோறும். 13

பாலையே கொள்ளும் வேனிற் பருவதது முல்லை யாதி
வாலிய பருவத் தின்ப மருவிய மயிலின் கூட்ட
மாலுவ தடாமை யெண்ணி யடங்குவ தறிந்து வல்லே
சாலவுண் மகிழ்வி னார்ப்ப தாயமுனி குயிலி னீட்டம். 14

எந்திணர்க் கொஙகைக் கொம்பி னேழையா தளிர்ச்செவ் வாய்த்தேன்
மாந்துமென் குயிலின் சொல்லின் மலிவன முசுக்கள் பாயப்
பூந்துண ருகுக்குந் தேறல் புயலென வெழுந்து மஞ்ஞை
யோய்ந்தன கனவி னரி னுளத்தெழு மகிழ்ச்சி யோடும். 15

பூந்துகள் விரவித் தோற்றுப் புதுமதுக் கவர்ந்து தேனீ
மாந்துதன் மாந்தி யெஞ்சு மதுவெலாந் திரட்டி நாளு

மேந்திணர்க் கொம்பு தோறு மிறல்பல தொடுத்து மாந்தர்
போந்தனர் கொள்ள வைப்ப புண்ணியம் விளைந்த தேபோல். 16

இலஞ்சி பொய்கைநீ ரோடையே யெந்திர வாவி
நலஞ்சி றந்துநீர் சுருங்கிநாண் மலர்பல பூத்துப்
பொலஞ்சி றைச்செழும் பவளவாய்த் தோலடிப் புள்ளின்
குலஞ்செ றிந்தெழில் கூர்ந்தொளி கொண்டன யாங்கும். 17

அயிர்வ ரித்தறல் வார்ந்ததுமெய் யடியவ ரகம்போற்
செயிர றத்தவத் தெளிந்துசின னீர்புடை யொழுகப்
பயிலும் வெண்மணற் குன்றமும் பாய்மணற் பரப்பும்
வியன்க ரைத்தரு நீழல்சேர்ந் தாமொழின் மிகுந்த. 18

ஆய தண்பனிக குடைந்திடும் போர்வையி னறையிற்
பாய தண்புன றீண்டிவீழ் வனபடா வேனின்
மேய தென்றணி போர்வையை வியத்தகச் சுருக்குந்
தூய வுத்தரா சங்கமே துணைவன வரைகள். 19

ஆன வேனிலின் மாந்தர்போ லொத்தடம் பொழிலுந்
தானு மாடுதல் கருதியோ வறிந்திலஞ் சையத
தேன ருவரைத் திகழ்ந்தெழு காவிரிக குடிஞைப
பேன வார்திரைப் புதுப்புனல் பெயர்ந்தொழு கியதால். 20

தேசத் துள்ளவ ரனைவருந் தேம்பொழில் புகுந்தும்
வாசத் தென்றன்மெய் யேற்றும்வண் காவிரி யாற்றுட்
பூசற் றண்புன லாடியும் பொங்கிய வெப்பம்
வீசத் தங்கிய புறநகர் மேவுதல் வலித்தார். 21

காந்து பன்மணிக் கலன்களுங் காமர்பூந் துகிலுஞ்
சாந்துந் தண்பனி நீர்களுந் தமனியப் பொடியும்
பூந்தண் டேறலு முண்டியும் பொற்பவெவ் வேறங்
கேந்து சேடிய ரிடந்தொறு மீண்டினர் சூழ. 22

களிறு பண்ணியுங் கவனவாம் புரவிபண் ணியுமிக
கொளிறு பன்மணித தேர்பல பண்ணியு முவந்து
வெளிறி லன்பரு ருடன்றழீஇ யூர்தர மேவிப்
பிளிறு கார்தவழ் சோலைபுக் கனர்பிணை யனையார். 23

காமவே ளனுமரசன் கைக்கொண்டு பகைகடக்கு
நாமவா ளிகடாமு னன்றேந்தத் துணிந்தார்போ
லேமமார் தருசேனை யெனுமடவார் பொழிலுலாய்
வாமமே கலைகதிர்ப்ப வயின்வயிற்சென் றலர்கொய்தார். 24

மலர்க்கணத்தாற பொறையாற்ரு வணங்கினமைக கிரங்கியோ
நலககுமெழி றமருப்போ னணிவாயநத பகைகுறிதகோ
வலககணுற வளிக்குலங்க ளலர்பலவும பசுங்கொம்பா
விலக்கருநல் வனப்பிழப்ப மிகப்பறிததா மடமாதா. 25

அடியா னும விழியானு மணைப்பானுஞ் சுவைபபானும
வடிவாரு நிழலானும் வசையானு மிசையானு
நடமாடுந் தொழிலானு நகையானு நட்பானுங
கடியார மலாந்துசில காரிகையா வழிநின்ற. 26

கைததளிரு மியறறளிருங காறறளிரு முலைதொசது
மெயததவெழின் முகமலரும விழிவண்டும் வாய்ககனியும
வைததிருக்கு மடமாத மருஙகுபெயாந தாமன்றி
யொத்தமலாப் பசுஙகொமப ரொடுவேறு தெரிப்பரிதாம. 27

கொம்பரெனச சிலாசிலைசக குறுகியவை யவநதமமைப்
பம்புமல ரெனப்பறிபபப பறறியுள நாணுவா
வெமபுமது நுகரிளைஞா வேணவா வொடுஙகொமபை
வம்பவிழ்கோ தையரொனறு தழீஇவெள்கி மருஙககலவாா. 28

சிறுபுறததின மயிாககற்றை சோநதலையப பசுஙகொம்பி
னறுமலாகொய விழுவிஞ னடககினற மாதாதமை
யுறுகலவ மயிலெனன யுளஙகொண்டு பெடைமஞ்ஞை
முறுகியவன் பொடுதொடாநது மூககினைககண் டயருமால. 29

மதுவிதழின் முறுககவிழ்தது வாாநதொாபூகுஞ செணபகததின்
பூதுமலரே யிபன்மணதநிற பொனனுமை நிலைநினற
கதுமெனச்சேன் றனாகொய்யுங காரிகையா ருயிாப்புறலான்
முதுசுவைத்தே மலரினைததது மொய்ததவியன் மணநதிரிநத. 30

கொய்யுநறு மலர்ததாதுங கொழுந்தேனுஞ் சிநதுதலான்
மெய்யளைநது மணங்கமழ மெலலியலா ரிடைவணடு
பையவணைந் தவருயிாப்பாற் பயந்தோடி யாடவாதோள
வெய்யமலாத் தொடைவீழ்வ தாதுயைபப மேவுவபோல். 31

துவ்வாத வமிழ்தனைய தொடித்தோளின் மடமாத
ரிவ்வாறு மலாபலகொய் தெழிலாரத தொடுததமைத்துச்
செவ்வாசப் பொற்சுண்ணஞ் சிவிறிமுத வியதழீஇ
யவ்வாாதண் புனலாட வன்பரொடு நதியடுத்தார். 32

காரமர் குழல்வளா சைவலங் கண்கய லொளிநகை நித்திலஞ்
சீரத ரம்பவ ளந்தனந் திகழ்தரு புற்புத முந்திநல்

லோணி சுழிகரங் கான்மல ரெனவொளிர் மாதர்கு ழாங்கொடு
நீரணி நதியொடு நதிபொர நேர்ந்தென நதியுளி றங்கினர். 33

கண்ணொடு கயலெதிர் பாய்ந்தன கையொடு மகரம லைத்தன
வெண்ணுறு கைவிர லொடுகளி றேற்றன வுதரம டிப்பொடு
தண்ணிய திரைபல முட்டின தாளொரு மூன்றொடு ஞெண்டுக
டிண்ணிய வரால்கம டஞ்சமா செய்தன மகளிரநீ ராடினர். 34

குங்குமம் விரவிய தண்புனல் குமரர்கள் சிவிறியின வாங்கிநின்
றங்கலுழ் மேனியர் கொங்கைநே ரண்ணுற விட்டன ரைதென
மங்கைய ரவையிடை யிடைவிழ வார்தரு பந்தினமு றுக்குபு
பொங்கறன் மேற்செல வுந்தினர் பொருசிலை வீரக ளம்பொர. 35

வாளொடு கியவொளி மின்னன மாதரு மெறுழ்வலி மைந்தருந்
தேனொடு கியமல ரெதிரெதி செலலுற வுந்தின ராடினா
கூனொடு கியகழை வண்சிலைக் குமரனு மிரதியு மனேகராய்க்
கானொடு கியமலர் வாளிகள் கடவினா பொருசமர் நிகரவே. 36

எதிரெதி ரொருவர்க ளொருவாமே லெறிதரு மலருளர் வண்டுக
ளதிரா வினவவர் மாலையி னணவின சிவிறியி னீாபொர
முதிர்துய ரொடுபுனன் மலர்மலர் முற்றின வலைகள லைத்தலிற்
கதுவின பயில்பொழி லிடர்புறங் கண்டவா தநிலை கொண்டென. 37

குதலைமென் மொழியரு மைந்தருங குஞ்சர மமர்செய்க ளம்பொா
மதலைக ளெதிரெதிர் நடவுபு வளையென விண்டையெ றிந்தனா
கதமலி பாசமெ னத்தொடர் கண்முறை வீசினர் தண்டினற்
புதமுறு தொடலையு ரம்புகப் போககின ரார்த்தன ராடினா. 38

சுண்ணமு நறுமலர்ச் சுண்ணமுந் தூயதண் குஙகுமச் சாந்தமுங
கண்ணியு மிளகிய தளிர்களுங கையரிக் கொண்டுசெல காவிரி
நண்ணலி னெடுகிய புணரியு நாறிய புலவினொ ழிந்துடன்
மண்ணினர் மண்ணவர் மகிழ்கொள மலகிய நறுமணங் கமழுமே. 39

இன்னண மாடிய வனைவரு மேறினர் கரைமிசை வார்பொழிற்
றுன்னின ரணிகள ணிந்தனர் சுவையமு தாரவ யின்றனர்
மன்னிய காதலி னன்பர்தோண் மருவினர் வேனிலு ருப்பினைப்
பின்னிலை கண்டன ரிங்ஙனம் பெருகிய வேனிலு நின்றதே. 40

அனைய காலையிற் கோழியி னிருந்தர சாள்வோ
னெனைவு மாண்டருள் புரிதரு மிறைவனு ருருவிற்
றினையும் வேனில்வெப் புறுவகை செய்துமென் றெண்ணிப்
புனையு மாலயந் தொறுஞ்சிறப் பெடுக்கெனப் புகன்றான். 41

ஞான கேதகிரத் திருந்தரு ணம்பரு ருருவி
றுண வேனில்வெப் பகற்றவு மரும்பொருள் பலவு
மீன நீங்கிய வுழையரி னெடுத்தனன் விடுத்தான
முறு மேருவான் றன்மனை யாளொடு மெய்புந்தான். 42

உடங்கு மாலொடு செலபவ மெருளியுமிழ் தாள
வடங்கு லாயவண் மூலைகளின வருடிவில் லிடக்கண
டடங்க லாபுர நீற்றிய வணணலாக கிதனை த
தடங்கை வாங்குபு சாற்றுது மெனததனி நினைந்தான. 43

காவி ரிககரை யடுததனன காதலி யோடு
கூவி ரத்தடந் தேரினை கூாத்தபொற் சுணணம்
பூவி ரைத்தசாந தாதிதூயப் புனலவிளை யாடி
மாவி ரைதவெழும் பூமபுனல் வாரகரை யிவாநதான். 44

தரங்க வாாபுன லலைததலிற் றணிககள னீங்கிப்
புரங்கொல சேவகற கமைததபூங கதிாபொழி யாா
மிரங்கு காவிரி யாறறுநீ ரொழுகொடு மிறநத
தரங்கு தீவினை யானஃ தறிநதனன் மாதோ. 45

நின்ம லாயணி யாரநா ணினகமென நினைந்தேன்
புன்மை யால்வரு காவிரிப் பூமபுனல் வீழ்ததே
னன்மை மேவிய நாணிலம் விற்குமன் னதற்கே
யின்மை வேறுமோ ராரமெவ் வுலகினு மினையே. 46

ஆத லாலடி யேனது கெடுததவன பிழையிற்
றீர்த லேபுரிந் தாண்டருள புரிவையே லதுநின்
மாதா மேனியி லண்ணந்துகொள் கெனமதி மாழாந
தோதி னுனுள முருகினுன் செய்கடன் முடிததான். 47

மன்னா மன்னரு மமைச்சரு மருங்குளார் பலருந
துன்ன நன்னதி நீங்கினன் சுடர்மணிக் கழலா
னென்னை யாளுடை யானிருந் தருள்வளங கொழிக்கு
நன்னா ஞானகேத திரததினை நடந்துசென் றடுத்தான. 48

அகில காரணர் வினைஞாபாற் பூதியை யளித்து
முகில்சு லாவநன் கிழைததமா மதிலைமுன் வணங்கி
நிகரின் மாமணி நிழற்றுகோ புரநெடு வாயில
புகரில் கேள்வியான் கடந்துபோா விடைப்புறத தடுத்தான. 49

எட்டு றுப்பினு மைந்துறுப் பினுமினி திறைஞ்சிக
கட்டு பொற்செழுங் கோயிலிற் றாமர்பன் மறுகு

கருவாய்ந்து வயிற்றகத்துக் கதித்ததுவளர் செயனமனையா
ளுருவாய்ந்த குறிகளினூ னுணர்ந்துடனே காப்பணிந்து
பெருகார்வத் தொடுமெங்கு மாற்பணமும் பெரிதாற்றித்
தருமானு மிறைகருப்ப தானவினை தகச்செய்தான. 163

இருமதியிற் புஞ்சவன மியற்றியிரு மூன்றென்ன
வருமதியிற் சீமந்தம் வகுத்திட்டான் மனுவேந்த
னொருமதித்தண் கலையென்ன வுறுகருப்பம் வளர்தோறுங்
குருமதியி னொளிமுகத்துக் கோற்றொடிவே றுருவானாள். 164

சுவையாது நுகர்ந்திடினுந் தொகவேற்றிட் டுறப்பனைத்து
மிவர்சாம் புகுவிக்கு மெழில்வயிறு கருவேற்றுத
தவநாளுந தன்னுருவம் வேறாகித் தகக்கவவை
யவநாளும் வேறாகி யலங்கும்வகை புரிந்ததே. 165

கொண்டல்படிந் திடுஞ்செம்பொற் குவடெனவு மலர்பதத்து
வண்டுபடிந் திடுங்கனக வனசமுகிழ்த் துணையெனவு மங்
கண்டவர்கள் வியப்பெய்தக் கடையவொரு
மண்டியபொற் செப்பெனவும் ... தலையாகக்
... வளர்முலைகள் கறுத்தனவே. 166

... முதற்கணையாய் வெயர்குமுலை கறுத்தலொடும்
வீரமார் கடைக்கணையாய் விளங்கும்விழி மலர்நோக்கிக்
கோரமா யெதிர்ந்தவரைக் குமைக்குமரு திறஞ்சிறிது
தீரவே யுள்வாங்கிச் சிறந்தநிறம் பசந்தனவே. 167

கணணீல மெனுமனையாள் காயநிறம் பசத்தலொடு
நணணீர்மை நுதலெனனு நகைமதியு நிறம்பசந்த
கண்ணீர்மைக் கணவனருந் தாவமிழந்துள் ளேமிகுந்து
வெண்ணீமை போர்த்ததெனன் விளர்த்ததுசெவ் வாயதாம். 168

தன்னுருவந் தோற்றமற் றறுகணமை யொடுந்தாக்கும
பொன்னுருவ முலைகறுத்துப் பொலிவழிந் தெதிர்நோக்கி
மன்னுவகை தலைக்கொள்ள வயங்குருவீங் கியதேயப்ப
மின்னுருவ விடைவிழிகட்குப் புலனாக விளங்கியதே. 169

அருங்கலம்புத் திரனன்றி யரிவையர்க்குப் பொன்னாதி
யிருங்கலமற் றருங்கலமா யிராதுமிகை யென்பாள்போற்
பெருங்கலன்கள் பொறையாற்றாப் பெற்றியினாற் போணியு
மொருங்கலர்மா லையுமுவப்பி னணியாத தளர்வினளே. 170

கருவிடத்து நீறிடுதல் கடனென்று திருநீறும்
பெருந்தடந்தோண் மகன்மழுக்கப் புகையுண்ட கருமண்ணுங்

தெருளுயிரக் கருவினிடைச் சிவனுயிலை யிதுபோலென்
றுருவநறுந் தீம்புளியு மூவந்தருந்தும் வயாநிறைந்த. 171

ஐயிருநன் மதியடுப்ப வகவேளாந்து கமலவதி
மெய்யினையக் கருமதலை மிளிரந்துசிபவ கீழ்நோக்க
வொய்யெனசசென் றரசனிடை புழையருமைத தலுங்கணிகள்
பையவிது பொழுதகலிற பாரதிபனே நன்றென்றார். 172

நன்முகுர்த்தம் வருமளவு நளிமைநதன் பிறவாமை
யென்முயன்று மெனவரச னினைற செயலகேளா
வன்மதியிற் கமலவதி மற்றென்னைத் தலைகீழா
வெழுன்மணிநூ புரத்தாளின் யாததினிதகாக கெகவெனறாள். 173

ஈஙகிதுவுந் திருவருளா லியனறதென வலிததாச
ஞஙகதுவே புரிமினென வயலிருநதா ர துபுரிநது
தீஙகுறுகா லகைடந்த செவ்வியினி விறககிறை
ரோஙகுவலம் புரிமுத்தி னெறுமைந்த னுதிததிட்டான. 174

தக்கபவ முறுஙகாலந் தாழ்த்தலினாற் றனிமைநதன்
செக்கர்நிற விழியினனுய்த திகழ்நதொளிருரு செயலேகைகி
மைக்கணுறு கமலவதி வளாகோசசெங கணணேறு
தொக்கவறந் தலையெடுப்பத தோன்றியவிம் மணியென்றாள. 175

உறைநத சோழநா டேயன்றி யுலகெலாம வியபப
விறந்த தேவரும் பிதிரரும விழுததக நினைப்ப
மறந்த வாதமெதம் மன்னரு மனஙகளி கூடபப
சிறந்த கான்முளை பிறததலுந் திகழ்சுப தேவன 176

அறஙக ளாகுக வாலயந தொறுஞ்சிறப் பெடுகக
பிறஙகு மாநகாத தெய்வமா திகளுமபே ணடுக
மறஙகு லாவுதெம் மன்னாகா ணிகளமவாய விடுகக
வுறஙகு வாருள ரேலவாக குறுமகி ழுறுகக. 177

திறைகொ டாதுசில் லாண்டுதெம மன்னரே சிறகக
கறைகொ டாதுசில் லாண்டுவாழ் குடிகளே களிகக
குறைகொ டாதமா நகமொலாங கோடணை கிளக்க
மறைகொ டாதபண் டாரமவாய் திறக்கவென றேவி 178

...ாய நீர்படிந் தடுததனன் றேன்றலை நோக்கி
...தகன் மத்தினை விதியுளி யியற்றி
...சன மாதிக டானமா வளித்துப்
பாய வோமமும் பத்துநா ளளவுமாற் றினனால்.

செய்ய கோலுடை மன்னவர் கையுறை செறித்திட்
டைய வோகையின் விஞையிஞர்க் கதிமகிழ் சிறப்ப
வெய்ய வேலிஞன் விழுக்கலன் பூந்துகில் பிறவும்
பெய்யு மாரிபோல் வழஙகினன் பெரும்புகழ் நிறுத்தான். 180

வளருத் தாபகம் வயக்கிவார் காதிணை துளைத்துத்
தெளிபு மாமதி மனைவிகோச் செஙகணு ஞேவென்
றளவி லோகையி னறைந்தவங் நாமமே மகற்கு
வெளிறில் கேள்வியான் விதியுளி யிட்டழைத் தனஞல். 181

கொங்கு யிர்த்ததாக கொற்றவன் குறித்தநா ளேனை
மங்க லத்தபல் வினைகளு மரபுளி யியற்ற
வங்கண் மெல்லிய லணங்கின ராற்றுவ வாற்றத்
தஙகு மைந்தருந் தனிமதி யெனவளர் கின்ருர். 182

இவ்வுலகே நாற்பொருட்கு மிடமென்று காட்டுதல்போ
லெவ்வமறு நிலத்திருகை யிருத்திநெடு வான்போகந்
துவ்வுதல்யான் விழைந்திலே னெனத்தலையைத் துளக்குதல்போற்
செவ்விபெறு முகநிமிர்த்துச் செஙகீரை யாடிஞர. 183

மாயையெனும் பெருந்தொட்டில் வல்வினையின் கயிறியக்கிப்
பாயபெரும் புவனமெனும் பரப்பனைத்துஞ் சென்ருட
லாயவொரு தாலொழிய வடுத்தவரை மணித்தொட்டி
லேயும்வகை யியைவித்திட் டேழையர்தா லாட்டிஞர். 184

எஞ்ஞான மில்லாம விதுகாறு நிலைகாணு
வஞ்ஞானப் பெருஙகடலி லலைப்புண்ட துயர்தீர்க்கு
மெய்ஞ்ஞான வரவறிந்த மிகுமகிழ்வின் விளைவேபோற்
றஞ்ஞானம் பெறவந்தார் சப்பாணி கொட்டிஞர். 185

இரவிமரு மானென்னு மியல்பெவர்க்குந் தெரிப்பவர்போ
லரவமணி மேகலையி னணஙகனையார் முகமென்னும்
புரியிதழ்த்தா மரைமலர்கள் பொற்பவலர் தரச்சென்று
முரிவிலருள் பெறவந்தார் முத்தமளித் தருளிஞா. 186

கானனையின் கற்பகப்பூங கண்ணியரு மிருடியரும்
பானனையு மணிச்சிறுவாய்ப் பாலன்வரு கெனவிளியாத்
தானனைய பெருந்தவத்தாற் சார்ந்தபெரி யவர்தம்மை
மானனைய விழிமடவார் வருகவரு கெனவிளித்தார். 187

சந்திரனீ சூரியனிற் றனிசமந்தன் பயிர்வளர்க்கு
மந்தரனீ யெவ்வுயிரு மளிக்குமிவன் ருரணியான்

சுந்தரமா ரிவனுடனே தொக்காட வருகவெனப்
பைந்தொடியார் மதிவிளிப்பப் பார்த்துமனங் களிகூர்ந்தார். 188

உற்றதோர் வினையன்றி யுருத்ததுசெய் தாலதனைப்
பற்றலா ரெனவழித்துப் பாரளித்த றெளிப்பவர்போன்
முற்றிலான் மணற்கொழித்து மொய்த்தசிறு மிபரிழைத்த
சிற்றிலா னவைபவர்கள் சினந்தலறச் சிதைத்திட்டார் 189

பிறவியெனு நெடும்பகையும் பெருகுகலி யின்பகையு
மறமலிமன் னவர்பகையும் வையகத்தோர் தீவினையு
மறவொழிக வறமனைத்து மமர்கவெனச் சாற்றுதல்போற்
சிறுவிரல்க ளொளிதுளும்பச் சிறுபறைகண் முழக்கினார். 190

பறந்தலையி னெதிர்ந்தவர்கள் பன்மணித்தேர் புறங்கொடுப்ப
மறந்தழையு மணிநெடுந்தேர் வல்லையுகைத் திடற்குரியார்
பிறந்தகதிர்க் குலத்தினுக்குப் பெரிதுமிகு திவையவெனச்
சிறந்தசிறு வர்களொடும்போய்ச் சிறுதேருங் குருட்டினார். 191

இத்தகைய விளையாட்டி னியலபொழிய வைந்தாண்டிற
பைத்தநெடுங் கடலுலகம் பரிக்குமொரு சுபதேவன்
மெத்தியபே ருவகையுறய் விழுத்தகுமங் கலஞ்சிறப்பப்
பொத்துமொழிற் கலைமகளைப் புணர்வித்தான் மகனார்க்கு. 192

சின்னாளிற் பயில்கலைகள் செயிர்தீர மிகப்பயின்று
பின்னாவத தொடும்படையின் பெருங்கடலைக் கரைகடந்து
துன்னார்கள் குடர்குழம்பத் துரகதமுங் கடகளிறும
பொன்னார்திண் மணித்தேரும பொருதிறத்தி னுகைத்திட்டார். 193

ஒங்கும்ப நயங்கவினை யொருபதிற்றாண் டினிற்பெற்று
வீங்குமறை முழுதோதி விழுத்தகைமை யொழுக்கெய்திப்
பாங்குபெறும் பதினாறாண் டினில்வதுவை பயின்றுலகந்
தாங்குமுறை மையும்பெற்றார் தறுகண்வினைப் பவமற்றார். 194

மண்ணுலகஞ் செங்கோலின் மலிவெய்த வேள்விகளால்
விண்ணுலக மலிவெய்த வேத்தவையின் வீற்றிருந்து
நண்ணலர்கள் பணிகேட்ப நவையனைத்து நலிந்தொழியப்
புண்ணியமெங் கணும்வளரப் புகழாசு புரிகாலை. 195

விளையாடும் பருவத்தும் வெண்ணாவல் வீற்றிருந்த
வளையாடு மணிநாகத் தகலத்தார் திருவடியே
யுளநாடி வருமவர்தா மோங்கியமுற் பவநினைந்தே
யளவாத திருப்பணிக ளாக்குதற்கு மனம்வைத்தார்.

படிநெளியு நாற்படையும் பரப்பியெழூந் தடையலர்த
முடிகளொடு முடிபுரள மொய்யமரி னுயிர்பருகிக
கடிகெழுபல் வளங்கவர்ந்து கழலடைந்தோர் திறைவாங்கி
மடிவில்பொரு ளொடுநாவல் வனத்தினைமுற் றினர்மாதோ. 197

மூந்திய பவந்தொறு முற்றி நின்றதோ
ரந்தமி லன்புமிக் கார நாவலின்
கந்தமென் னீழலிற் கலந்து ளார்பதஞ்
சிந்தைசென் றிறுகுறச் சென்று தாழ்ந்தனர். 198

திருவுரு நோக்கினர் செஙக ணீருக
வுருகினர் குழைந்தன ருலப்பி லானநதம
பருகினர் மறைபல பாடி யாடினர்
பெருகிய வன்பொடும் பெயர்ந்து சூழ்ந்தனர். 199

அரிதவ ணகன்றகி லாண்ட வல்லிதன
பரிபுரச் சீறடி பணிந்து போற்றினா
வரியளி முரலுமவ் வனத்தி லோரிறை
யுரிமைசெய் பரிசனத் தோடும் வைகினர். 200

சூழ்ச்சியின் மிகுந்தவா தொகுப்ப நோககுபு
வாழ்ச்சிவெண் ணாவலின் மருவி னாககிவண்
டாழ்ச்சியில் பொருளெலாந் தயஙகு மாலயம்
வீழ்ச்சியில் வினைஞரால் விதிக்க வென்றனா. 201

அருடலைக் கொண்டுசென் றமைசச ராதியோ
ருருவள ருலோகமிக குருக்கு வாரையுங
குருமணித் திரள்களைக் குயிற்று வாரையுந்
தருகவென் றேவினா வியவர் தஙகளை. 202

வியவரும் வினைஞரை விளிப்ப வேகினர், நயவரு மிரவியு நரலை சென்றதாஙகயர்வுறு மாலையு மடுத்த தவ்விராக், கயவுரிப் போர்வையார் கனவிற் சொல்லுவார்.

அடியவர் வேடமோ டடுத்த நாயகர், முடிகெழு வேந்தனை முகத்து நோககுபு படிமுழு தாள்பவ பணிபொன் ஞதியான், மிடியறச் செய்வது வேட்டு நின்றனை.

வேட்டவவ் வுளத்தினை விடுதி விண்ணவர், நாட்டுள தச்சன்மு னண்ணி நம்முழை வாட்டமி னிருமித வாகசொண் மூன்னரோ. கோட்டமி லாலயங குயிற்ற வெண்ணினன்.

மேவிய கெண்டகை விலங்கற் சாரலிற்
பாவிய கெண்டகை நதியின் பாஙகரிற்
றூவிகை விமானங்தன் றெுடிசகை யாவிழைத்
தோவிலன் பாலிவ ணுறுத்த லூக்கினன், 206

ஆகைவற் கதனையவ் வாற்றி னிட்டுநீ
நீங்குகென் றுமது நிகழ்த்தி யன்னவன்
பாங்குறு மித்தலம் படர்ந்து மாதவந்
தாங்கிநன் னிருமிதத் தலைமை பூண்டனன. 207

ஆதலி னாங்குநீ யடுத்திட் டவ்வயிற்
கோதறு முருத்திரா கோடி யோர்குழீஇ
மேதகு பூசனை விளைத்துப் போற்றிய
நாதரு முளரவர் தம்மை நண்ணுதி. 208

முன்னவ ரருளினன மொழிந்த வாறுந்
பின்னது தனையிவட் பெயர்த்து வையென
நன்னய மொழியினை னவின்று நீங்கினா
சொன்னவை நனவெனத் துணிந்து சோழனா. 209

விடிந்தபி னமைச்சரை விளித்து மற்றிவண்
முடிந்தது முதல்வனா ரருளி தென்றவா
தொடர்ந்தவா நாலவகைச் சேனை சூழ்தரப்
படர்ந்தனர் வடமுகம் பார்த்து வேந்தனார். 210

கலைசெழுங் கரத்தவா கரைந்த கெண்டகைச
சிலைத்தலை நதியினைச் சேர்ந்து பாங்கரி
னிலைத்தநின் மலனடி நிகரில் வந்தனை
நலத்தகப் புரிந்துசின் மருளங் குறறனா. 211

முந்திடத தெயதிமுக கண்ணா கூறுவா
ரிந்திடத் துளதலெ தெடுத்து மீட்டுமிங
குந்திடத் துறுகென வுறுத்திச சென்மதி
யந்திடத் துறுமென வருளிப் போயினார். 212

அயிலுறு சூற்படை யமலா கூறலும
வெயிலுறு பூணுடை வேந்த னார்மணி
பயிலுறு நதியிடைப் படிந்து நேருறக்
கயிலையை நேர்விமா னத்தைக் கண்டனா. 213

புரையறு சிற்பநூல் புகன்ற வாற்றினை
வரையென விலகிய விமானம் வல்லையே
கரைமிசை யேற்றினர் கண்டு மீட்டுமவ்
விரைநதி யிட்டனர் மேவு காங்கென. 214

விமலரை யாயிடை மீட்டும் போற்றினா
தமதிருஞ் சேனையுந் தாமு மீண்டுசென்

றிமையவ ரேத்திய நகரை யெய்தினு
ரமுதலிங கேசனை யன்பிற் போற்றினா 215

திரைதவழ் பொன்னி சாாந்து செங்கணா னிறைப வாகக்க
கரையர்முன் வடாது திக்கி னமரொரு தடத்தின் மூழ்கி
விரையவை யாற்றுப் பொய்கை மீமிசை யெழுந்தா லென்ன
விரைபுனற் பொன்னி நாப்ப ணெழுநதது விமான மமமா. 216

புற்புத மெழுந்தா லென்னப பனலிடை விமானந தோன்றத
தற்பரன் சரண மன்றிச் சார்புறுத தலைமை மனன
ரற்புத வுளத்த ராகு ரமாரு மிறுமபூ தூற்றுர்
சொற்பயில் புவியி னேருந் தோலவியின் மகிழ்ச்சி பூததார. 217

அடியவா தமககெய தாத வருமபொருள யாதொன றிலலே
கடிகெழு நாவ னீழற் கண்ணுத லருளி னுலே
படிமிசை யெவருங் காணப பரநதகெண் டகைநீ ராற்றி
னிடுசிலே பொன்னி யாற்றி னெழுநதுமேல விளங்கு மெனமுல 218

வினைஞரைக கூவி யெலலா மேதகக சரையி லேற்றி
நனையவிழ் நாவ னீழ னம்பனுக கினிது சாத்தித
தனைநிக ரதனி லொன்பான் சாளர மேலபால வைததுப
புனைமணி வாயி றென்பா லாககினா புரைதீ ரனபா. 219

மொழிந்ததென் வாயத னேரே முபபது சாலே கததோ
டெழுந்துவிண் ணளாவுங கோயிற் கிணங்குமண் டபமு மற்றுஞ
செழுந்திருச் சிலேயாற் சிஙகத் துருவென ச் சிறநது தோனறக
கொழுந்துகொண் டெழுநத வனபிற் கொறறவா குறிததுச செயதார.

மண்டபம் பிரகா ரஙகள வயஙகுகோ புரஙக ளாதி
விண்டொட விழைததிட் டெஞ்சும விழுந்தி முழுது மோர்சார
மிண்டறத் தாபித் திட்டு மேகதற வதற்கு நேரே
கொண்டமண் டபதது மேலாற கோயிலொன் றிழைத்திட் டாரால.

சித்திரக் கோயி லுள்ளே சிவலிஙக மொனறு தாபித
துத்தம நிதிக ளெல்லா முமதருள் வசமா வீங்கு
வைத்தனன கைககொ ளென்று வணஙகினு ரதனு லந்தப்
பித்தருக் குளதா லாதிப் பெருஞ்செல்வ ரென்னு நாமம். 222

சம்புவீ னீழ லார்க்குத தகககவா கமத்திற செய்யு
நம்புநித் தியமே யாதி நவையறு பூசை யெலலா
முமபரும் விழைய வாற்றற் குரியவர் தம்மை நாடி
யிம்பரி னிருத் து வாமென் றெண்ணினு ரிகல்வேன் மன்னா. 223

காசிகே தாரங் காஞ்சிக் கடிநக ராதி மூதூர்
மாசுதீர் குலத்தின் மேலாய் வளர்சிவத் துவிசர் தம்மை
நேசமோ டழைத்துப் போந்து நிதிநிலஞ் சுதந்தி ரங்க
ளேசுதீர் மனைகண் மற்று மீந்தனர் தாபித் திட்டார் 224

தருமமுந் தவமும் பேணுந் தலைமைபூண் டமுத லிங்கர்
திருவடிப் போது போற்றுஞ் சிவபத்தர் தமக்கு மொன்பா
னுருவளர் மடங்க ளாக்கி யூதியம் பலவு நல்கி
யிருநிலம் வியப்ப வெல்லா வியற்கையு நிறுவி னாரால். 225

இவ்வகைப் பணிக ளெல்லா மீங்கிவ ரியற்று நிற்பச்
செவ்விய வழுதி யாதிச் செருத்திறல் வேந்தர் போந்திட்
டவ்விய மில்லா நெஞ்சி னளவளா யவர்கட் கேன்ற
நவ்வியங் கரத்தி னார்த நற்பணி யியற்றி னாரால். 226

காலமோ ராறும் பூசை கடிவிழா வாதி யெல்லா
மேலுமா றியற்ற நோக்கி யின்பகந் ததும்ப வாங்கே
சாலுநாள் வசித்துப் பின்னர்த் தலந்தொறுஞ் சார்ந்து நம்பர்
கோலமார் பணிக ளெல்லாங் குயின்றுதம் பதியைச் சார்ந்தார். 227

ஆயிடை யிருந்த வாறே யரசுசெய் துலகத் துள்ள
கோயில்க டோறும் பூசை குறைவற வியற்று வித்துப்
பாயின மலங்க ளறப் பாசுக வடிவொ டொன்றாய்
மேயினர் சிவலோ கத்தின் விறற்கண நாத னென்ன 228

என்றுமிக் குழைத்த சூத விருடியை முனிவர் நோக்கி
நன்றுறு சரித மீங்கு நவிற்றினை சிலம்பி யானைக்
கொன்றிய பூசை வேட்கை யுற்றவை ஞான பூமி
வென்றிகொ டலைவன் பாத மேவுகா ரணம்யா தென்றார். 229

கடுத்தெதிர் வினவி நின்ற கரிசறு முனிவர் தம்மை
விடுத்தவைம் பொறியி னீன்ற மேதகு சூத னோக்கித்
தொடுத்தமெய்ப் பத்தி யோடுஞ் சூழ்ந்துரை வினவிற் கங்கே
யடுத்திட விறுத்து மாலென் றறைதரப் புக்கா னன்றே. 230

கயிலைநெடு வரையகத்துக் கணநாதர் பலருள்ளும்
பயிலுமா லியவானும் பகர்புட்ப தந்தனுமென்
றியலியற்கைப் பெயருடையா ரிருவருமுப் புரமெரித்த
சயமுடைய சேவகனார் தகும்பணியிற் றலைநின்றார். 231

ஒருவரொரு வரைநோக்கி யுளத்தெழுந்த பொருமையினு
லொருவரொரு வரிற்பூசை யுஞற்றுதலான் மேம்படுத

திருகுமுளைத் தொடுகின்னைந்து தினமும்மிக லினர்வருங்கா
லிருவருமோ ருழியெதிர்நே ரெய்திமிகத் தருக்கினர். 232

தருக்கியிரு வருந்தம்முட் டழலவிழ்தது முரணுமிடைப்
பொருக்கெனமா லியவானப் புட்பதந்தன் முகநோக்கி
வெருக்கொளிப மாகென்றான் வெகுண்டிடுமா லியவானைச்
செருக்கிளரும் புட்பதந்தன் சிலம்பியா கெனச்சபித்தான். 233

மாறுத பெருஞ்சாப வலைப்பட்டிங் கிருவோரு
மாறுடு சடைமுடியா ரடிபணிந்து விளைந்ததிது
வேறாக வருளுகென வேண்டினார் வேண்டுதலு
நீறாடுந் திருமேனி நிமலனா ரருள்செய்வார். 234

வானநா டருமபழிச்சி வரமேற்குஞ் சோணாட்டுண்
ஞானபூமியையடுத்து நமதருட்பூ சனையாற்றி
யானதோர் தலத்தினுமிக் ககத்திகலி யுயிரிறந்திவ்
வீனமா கியசாப மிழப்புறுவீ ரெனவிடுத்தார். 235

அனையபெருந் தவமுடையா ராதலினா லருந்தவதரி
வினையகலுஞ் சிவபூசை விழைவினொடுஞ் சிவம்பெருக்கித
தனைநிகரு ஞானதலஞ் சாரந்தனரென் றிறுத்தப்பாற்
புனைதவத்துக் கவுதமனார் புரிந்தபணி சொலப்புக்கான். 236



# கௌதமப்படலம்.

தவமலி யோகருட் டலைமை சான்றவ
னவமறும் வெண்பொடி யவிரு மெய்யின
னிவருறு கண்மணி யிலங்கு பூணினன்
கவுதம னெனும்பெயர் கலந்த மாதவன். 1

முகிலுறழ் கருங்குழன் முத்தந் தைவரு
நகிலின ணறுமணங் கமழு மெய்யின
ளகலிகை யெனும்பெய ரணங்கு தன்னொடும்
பகலிக ழன்பனாய்ப் பண்பின் வாழுநாள். 2

பொன்னுல காள்பவன் பொருவின் மாதரா
ளின்னலம் விழைந்தன னெதிரி லம்முனி
தன்னுரு வெடுத்தனன் சார்ந்து தையலாய்
நன்னலம் வேட்டன னான்மற் றிந்திரன் 3

மாரவேண் மலர்க்கணை மலையப் பட்டுளே
னாரமா முலைகளி றடுத்து நினைவிழிக்
கோரவா னுறத்தழீஇக் குமைத்து வெம்பகை
வீரநான் பெறத்தகும் வேலை யீதரோ. 4

கருதலா போரினாற் காய நீங்குறுத்
திருவள ரமுதந்தெண் கடலிற் பெற்றுளே
னுருவிலி போரினா லுயிரு காமைநின்
னுருவள ரமிழ்தமிக குதவு கென்றனன். 5

பண்டைய ஊழ்வினைப் பாழி யென்சொல்கேன்
மண்டழன் மெழுகென மனநெ கிழ்ந்துநாண்
விண்டனள் காதலை விழியிற் றேற்றியாள்
கொண்டனள் பின்வருங் குற்ற நாடிலள். 6

இந்திர னோநமை யிரக்கின் றானெனப்
புந்தியி னரும்பிய பொருவி லோகைய
ளந்திநெட் டுயிர்த்தன ளாண்ட காயினி
முந்திய தெனக்குமான் முயங்கு கென்றனள்.

கறைபடி வெங்கய கடவு குஞ்சர
நிறையெனுங் காவல்கை நெகிழ மாதென
வறைபெறுங் கானகத் தடுத்திட் டைம்புலக்
குறையறு குளகுவாய் குதட்டிச் சென்றதே 8

காதன்மொட் டரும்பிமெய்க் காமச் செவ்வியி
னேதமின் மலாமலர்ந் தின்பத் தேன்சொழித்
தாதகக் களிப்பளி யுலாவ விந்திரப்
பாதவம் படர்நதது பசும்பொன் மென்கொடி. 9

கலவிதுய்த் தின்னணங் களிப்ப நீடிய
வலர்முலை மாதினை யகலுஞ் செவ்வியிற்
பலர்விழை கவுதமன் படர்ந்து நோக்கினு
னலமலி தனதுரு நண்ணும் வஞ்சனை. 10

யாரிவ னெனதுரு வெடுத்து ளானிவண்
யாரிவன் புருதர வெண்ணுங் காரியம்
யாரிடை யிவற்குறு குறையென் றெண்ணுவான்
யாரினுங் கைதவ னியல்பு தெள்ளினான். 11

உள்ளவா றுரையென வுருத்து நோக்கினான்
றெள்ளுமா தவனவன் சிவப்புக் கஞ்சுபு
கள்ளனு கியவிசும் பமரா காவல
னள்ளுமா றிதுவென நவிற்றி யிட்டனன். 12

விழுமிய வருந்தவன் மேக வாகன
வொழுகுறு மறைநெறி யொருவிக கற்பெனுஞ்
செழுவிய பெண்மையைச் சிதைத்த நின்குறி
யழுகிமண் விழுகெனச் சாப மாக்கினான். 13

சிலைமர மென்னவே தெவ்வி னோர்வச
நிலைபெறு நீர்மையி னிற்றி யாதலிற்
கலைதிரி கானிடைக் கல்லு ருக்கொடு
மலைவறக் கிடவென மனைவிக் கோதினான். 14

இந்திரன் விடணமங் கிற்று மண்விழ
வந்தரத் தெய்தின னமரர் நும்பொருட்
டுந்திடத் தொருவினை யுஞற்றி னேற்கிது
வந்தது வானுளீர் மாற்றுவீ ரென்றான். 15

கடவுளர் சூழ்ந்தனர் கடுகி மேடத்தின்
விடணமே விடனுக்கு விடண மாக்கினார்

மடனறு மகவிகை மாதுங கல்லென
விடவிய கானகத திளைநது வைகினாள். 16

மனையவ ளின்றியே வைகுஞ் செவ்வியி
னனையவட் கறப்பய னண்மை மத தாகலின
வினைசபு முனிவற்கு விளங்கு மோர் தின ம
புனையிழை கலவியிற் புந்தி சென்றதே. 17

பெருந்தவன காமநோய் பிணைந்து ளானனி
வருந்துவ னவன்படி வருத்தங் காணுதல
பொருந்துவ தன்றெனப் பொலிந்த வெய்யவன்
றிருந்திய குடகடற செல்லன் முன்னினான். 18

இருளுஞ் சானவா குழுககளு மிறுததிறுத் தொழிக்குஞ்
செருவி னாந்தசெய்த தோரசெ ரிந் திட்டது சிவணும்
பரிதி நாயகன சேநதது பறநதலை யுழுகக
பெருகு சீப்பிர தாபமபோரத திட்டதும புரையும். 19

பாவ காரிய ருடலமும பலந்திக கரங்கண
மேவ லாலுறுந் தொடககினை விளிப்பவன் போல
வோவி லாதவஞ் சொரிநதிரு ளொதுககுவெஞ் சுடரோன்
றுவு மேழ்பரித் தேரொடுஞ் தடங்கடற் குளிததான். 20

மணநது ளாருயிர்க கிருமபண வளர்ககுமந் திரத்திற்
புணர்ந்த வேள்வியிற் செய்யவான் றழலுமாய்ப் புணர்ந்து
தணந்து ளாருயிர நீத்தவி சாரத்திற் றகநூ
லுணாநது ளாரபுரி தழலுமா யொளிர்ந்தது செவ்வான். 21

அருளசி வத்தினின் றெழுவெழு ந்தகிலமு மதுபின்
மருவி யொன்றுறக காததலு மடியுமா போலப்
பரிதி தண்கட லெழுவெழும் பறவையா திகளப்
பரிதி தண்கடல் விழவடங் கினபயி விடமே. 22

அளிசெய தின்னலை யகற்றமா றருளொடுங கலந்து
தெளியி னல்லதை செறிந்தறி வுயிர்ககுமா மலநோய்
விளிவ தின்றென விளககுமோர் சான்றதாய் விழிக
ளௌிய தன்மையி னிருப்பவல் லிருள்பரந் தன்றே. 23

பெரிய ராற்பெருங் காரியம் பேணினர் முடித்தற்
குரிய ராங்கவ ரொழிந்துழி யொழிந்தவர்க் கினமேற்
சிறிய ரானுமக் காரியுஞ் செய்துகொள் வதுபோற்
சிறிய தாமொளி விளக்கினுற் றிதழ்ந்தறிந் தனகண்.

ஆத வற்கும்வெண் மதிக்குமிக் கவிரொளி தனதே
யாத லிற்சுட ரிரண்டினு மடப்படா விருளுங்
காது தற்குரி விளக்கிடைக் கண்ணியர் வதன
மோது டுத்திர ளிடைமதி யெனவுலாத் தருமே. 25

இருண்ட சேவலத் துயிலென விருண்டன சிலகண்
மருண்ட தாஞ்சக லத்துயிர் மானவே சிலகண்
வெருண்டி டாதொளிர் விளக்கினல் விளங்கின சிலகண்
டெருண்ட வீட்டின ரெனச்செறி யிருள்கழிந் திலவே. 26

அன்பி னைந்தினைக் களவொழுக் கத்தின்மிக் கான்றோர்
வன்பின் மற்றைய பொருள்களைக் களவின்வவ் வுநர்க
ளின்ப வன்பரைப் பிழைக்குநர் பேயில ரெல்லாந்
துன்ப மற்றனர் துகடுக ளினர்க்குத வாதோ. 27

தயங்கு பேரொளிச் செக்கர்வா னெனுந்தழற் பிழம்பி
னியலகு கார்நிறப் புகைவிரா யிறுதததே போல
வயங்கு ருதுபல் லுயிர்த்தொகை யயர்வுற வடுத்த
மயங்கு காரிருண் மென்மெல மலிந்தது மன்றே. 28

மண்வி ராம்புனல் விராவழன் மானமேல் கடற்பால்
விண்வி ராவொளி விராவிருள் விளககெழல் விராவு
மெண்வி ராவுகால் பொரவிதின் விராவுவான் குறியிற்
றண்வி ராவிய தவளமா மதியெழ நசன்றே. 29

எழுந்து மாமதி தோற்றலு மீர்ககலை யமிழ்தச்
செழுந்தண் வார்கிர ணககெண் டிக்கினும் பாந்த
வழுந்து சேறெனப் பானிலாப் பிழம்படர்ந் தன்று
விழுந்த காரிருண் மெய்யெழப் பொய்விழுந் தாகரு. 30

ஒளிமி குந்தவ ருயினு மூனமா திகமர்
களிமி குந்தவ ருயினுங கடனமக் கன்றென்
றளிமி குந்ததா ரகைபகற் கழகுரு தழிந்து
தெளிமி குந்ததன் பதிக்கெழி ரிகழ்ந்தது நெடுவொன். 31

உருக்கும வெய்யவ ராயினு முற்றவர்க் கின்பம்
பெருக்கு மன்பினர் தண்ணிப ராயினும் பேணார்
கருக்கும் வன்பின ராவர்வெகு கதிரவ னலர்த்தி
யிருக்கு மம்புயஞ் சுருக்கின னிலகுதண் கதிரோன். 32

நொதுமல் காட்டின கோட்டலர் நுண்டுளித் தேறற்
பதும நீடிய பகையினைக் கூட்டின வெனத்தாம்

விதுவி னீறுற வாதனன் றனைவிழைந் தாங்கு
மதுவ ருந்தண் குமுதமு நீலமு மலர்ந்த. 33

செயலை மாவினுண் மரமெலாம புகழொடு சிறந்த
பயிலு நீரின பதுமநீ லங்களாற் சிறந்த
வுயர்க வார்கொடி யினைத்துமென் றுலென வொருப்பட்
டயர்வின் மானுக் கொருகணை யலர்ந்தன முல்லை. 34

தமியா வாண்முகத் தொடும்பக னிகர்த்ததண் மதிய
மெமியர் வாண்முகத் தொடுமிப வொத்தில கியதா
லெமியர் வாண்முகத் தொடும்பக லிருந்ததா மரைக
டமியர் வாண்முகம் போன்றன தயங்கிய விரவில். 35

புரிந்த வன்பமைப் புணர்ந்தவா புணர்முலைக கழிந்து
பிரிந்த மங்கையா பெருமுலை முன்பக னிகாதத
றெரிந்த சக்கர வாகங்க டிங்கள்பைங கதிர்கள்
விரிந்த பின்பகல் பிரிந்தவர் முலையும்வீழ்ந் திலவே. 36

கணவா வைகிய காரிகை மடநதையா கருங்கண
மணம விந்ததண் டாமரை மலரலா னிகரா
கணவர் வைகிய காரிகை மடந்தையர் கருங்கண்
மணம விந்ததண் குவளையுஞ் சகோரமு மலையும். 37

கரண்ட மேவிய பொய்கையிற் கமலமா மலரிற்
றிரண்ட தேத்துளி பருகியுஞ் செறியிதழ்க் குவளை
வரண்டு வார்மதுப் பருகியு மகிழ்ந்தவண் டொன்றே
யிரண்டு காலத்தும் பிரிவிலார் விழியிழைந் தனவே. 38

வீங்கு தண்புன லெடுத்தெழு மேகங்கள் வளர்ப்ப
வோங்கு பைம்பயிர்க் கொளிர்ந்துதன் வயிற்றெழுந் திங்க
ணீங்க ருங்கரு வுறுத்திடு நெடும்பயன் குறித்துத்
தாங்க ருங்களிப் பானனி தழைத்தது புணரி. 39

அளிக்கத் தக்கன விரவியி னரவிந்த மாதி
களிக்கத் தக்கன திங்களிற் கயிரவ மாதி
யொளிக்கத் தக்கது சுடரிரண் டானுமோங் கிருள்சீ
விளிக்கத் தக்கவர் யாவரின் விழைதகப் படுவார். 40

பிரசம் வார்கணைப் பெருஞ்சுவைச் சிலையெறுழ்ப் பெருந்தோ
ளரசன் மாமதி வெண்குடை நிழற்றவார் கலியின்
முரச மார்ப்பெழ மொய்குயிற் காகள முழங்க
விரசு கான்மணித் தேர்கடாய் வெய்யபோ ருழந்தான. 41

மாதர் பாலம ருளுதென மைந்தாக ளகத்தரா
மாத ராடவர்க் குடைதரு மாரவே ளென்று
மாத ரோடுதங் கணவரை மணந்தன ரவர்பான்
மாதர் வேள்கணை தொடையடக் குண்டன மாதோ. 42

கொங்கை யன்றிது மாரனுர் தொடுத்தகோ கநகஞ்
செங்கை யன்றிது மாசிற மன்றிது செயலை
தங்கு வெண்ணகை யன்றிது தளவுவாள் விழியன்
றிங்கி துற்பல மெனத்தணந் தார்சில ரினைந்தார். 43

காம னூர்மத யானையைக் கருங்குழற் பிணித்துக
காம னுருரு நுசுப்பிடைக் கரந்துதண் கவிகை
காமர் வாண்முகத் தடக்கியிங் ஙனமெலாங் கடந்து
காம வீரராய்க் களித்தனர் கலந்தகா ரிகையார். 44

இனையபுன் மாலைவாந் திறுத்த வெல்லையிற
றனைநிகர் கவுதமன் றனது நெஞ்சிடை
நனையென வருமபிநற் போது கொண்டதோர்
வினைநிகர் காமநோய் மிகக லாந்ததே. 45

மாரனுந் தனதுகை மதுகை தோற்றிரு
ணீரவெண் டிங்களு மெரியு மிழ்ந்தது
கோரவல விடமெனக் குளிர்ந்த தென்றலுஞ்
சாரவம் முனிவரன் றளர்தன் மேயினன. 46

எல்லுருக் கரதத லுமெபூந்த காமநோய
வலலுரு மேறென மதியைப் போழ்ந்தது
கலலுரு வாயினள காதன மாதரா
ளல்லுருக் கின்றதென் றயர்ந்து மாழ்குமே. 47

உருவெளித தோற்றலு மோடிக கைகளான
மருவுறத் தழுவிடு மாய யோவெனுந்
தெருமரச் சிலையெனச் செபத தீமையாற்
பருவரற் படுத்திகொல் பாவை நீயெனும் 48

எரிகுங கண்ணனென் றறிந்துமீ சனுகெதிர்ந் துடல
மரிக்கும் பேழை யை பிருந்தைபா ல கதவன் மனமுந்
திரிக்குந் தீமையை தெரிவையர் சிததமும் போராற்
பொரிக்கு மாண்மையை யென்னைநீ பொராய்கொன்மன் மதனே. 49

கடித்து மென்றுமெயா ழ மிழ்ந்திடப் படுங்கரத் தினில்வில்
பிடித்து மென்கரத் தாற்பிசைந் திடப்படுங் கணைக

முடிக்க மெல்லிதழ் மாதரை நீயொடு துறப்பின
முடித்தல வல்லகொல வஞ்சின முழங்கினை மதனே. 50

வெம்பு சாபமுன் வாங்கின தொழியயோ வாங்கின்
வெம்பு சாபம்ப ன வாங்குவை சாதமவேட் குரிசி
லம்பு தூவுவை யாயின்வா ளரிக்கண்ணே லிரதி
யமபு தூவுவ ளன்னவ ளாயுளின் காறுட. 51

தனது சேனையைத தணந்தவாக கலலது சாங்க
டனது சேனையைச் சாரந்தவாக குறுததிடா தவனைத
தனது சேனையைச் சம்புவாற் றணப்பினல் லாது
தனது போரிடைத தணித்தலுங் கூடுமோ வென்னும. 52

கற்ற கல்வியுங் கணணகத தஞசனம் புறதமீத
யுற்ற வொண்பொருள் விளககியுண் கண்ணினுக குதவாப்
பெற்றி யொப்புறப் பிறாககெலா முதவியே பேணிப்
பற்று மற்றெனக காவதின் றேயெனப் பரியும். 53

தேயு நீரினை தேயததிடப் பட்டனை கறையை
காய மேகதி யாகிய கவலையை துருவன்
பாய சூத்திரப பிணிபயினை பாருழைத தருககி
மாசை நோயையும் வளரப்பது தககதோ திஙகாள 54

அந்தி வண்ணாதம மேவணிபி ணிரப்பமா ரமிழுத
முநது தண்கதி பாற்பயிா விளைககுமோ பறமுஞ
சிந்த வெமபர வுண்பது நுவையிற நீரந்தோா
நந்த வெம்பிய பாவயன் மேருநகு திஙகாள். 55

கரிய நஞ்சினும் வெண்ணிற நஞசுங் கடியை
பெரிய தண்கடற பிறநதஞான் றல்லது பெருமா
னுரிய கண்டநின் றெவரைய மூலசெயயா ததுந்
புரியு மென்சடை யிருநதுநோய் புரிதிவெண டிஙகாள. 56

விடங்க ளிந்தவுட் டுளையெயிற் றராவும்வெய் துமிழு
மடஙக ருஙகொடுந் தீயைந் யாதலி னமல
னிடங்கி டந்துமின னருளினை யலையிகல காம
னுடஙகு டன்றனை பாளிர்மதி தகுஙகோலோ வென்னும். 57

வான்ம ருந்திலக் குமிழுதல வளமபடு புணரி
தான்வ ருநதாஙஞ் சுமிழ்ந்ததே யெ ரிற்றவத தழங்கி
மீன்ம லிந்துவர் புலான்மிடை நீ பிடி பளவு
நான்வ ருந்தவு முனிதாா திருநதியோ நபலாய. 58

நல்லவர்க்கிட ரேபுரி நவையினர் தமக்கே
செல்லும் வண்ணமெல் லாந்திக ழுதவியே செய்து
மல்லல் குன்றுறப் பன்முறை வறந்தனை யணங்கற்
கொல்ல லொல்லெனு மொலிகட லேயென வுரைக்கும். 59

சந்தன மலயக் காலே தமியரை வருத்தி மேவண்மெய்
வெந்தனன் கவிகை யாகி விதுக்குறைந் ததுதே ராகி
மந்தமுற் றனைநீ யென்னே மற்றுமன் யதனைத் தாங்கி
வந்தனை நீநட் பார்யார் வருந்தியும் வருத்தா ரென்னும். 60

காமனை யுயிர்த்த மாயக் காமரு விடையின் சாதி
யாமத விடையின் கண்டத் தணிந்திடப் படுத லாலே
தாமணிக் குலமு நம்பாற் றெருகுபிணி செய்யா நின்ற
கூமணிக் குயிலோ பீழை கூர்ந்திடா தென்று நையும். 61

இவ்வகை யிரவி னெல்லாப் பொருளினு மினையா நின்ற
செவ்விய முனிவன் சாலச் செய்தவப் பயத்தின் பேறுறு
லவ்விய மளிக்கு காமக் கருமருந் தளிக்கு நாத
னவ்வியங் கரத்தா னன்றி யிலையென நாட்டங் கொண்டான். 62

வானநாட் டவர்க்கு மெய்தா வரம்பல வழங்கா நின்ற
ஞானகேத திரத்தை நண்ணி நாண்மதிக் கண்ணி யாாதா
மீனநா மகல வலமே யினிதருள் வழங்கு வாரொன்
றானமாங் ககல வுன்னி யொருமருங் கிருந்தா ரே. 63

பெருந்தவ முனிவரன் பெரிதுங் காமத்தின்
வருந்தின னின்னுநாம் வருத்திற் சாபமுந்
தருந்தரு மெனவரை யிரவுஞ் சாய்ந்தது
விருந்தென வைகறைப் பொழுது மேயதே. 64

இராக்குறி நுகர்ச்சியி னெய்தி னோர்களு
மராப்பாத் தையர்மனை மருவினோர்களு
முராய்ப்பல விரைகளி னுற்ற மாக்களும்
விராய்ப்பயி றமதிட மேவ மீண்டனர். 65

ஊடிய மகளிரை யுணர்த்தும் பாணியும்
வாடிய வூடலை மாற்றி யின்பமே
நீடிய கலவிக ணிகழ்த்தும் பாணியு
மாடக நூபுரத் தொலிய முதவே. 66

மெத்திய காரிருள் விடியன் மேவலு
மைத்தடர் காய்வல் லிருளு மல்கிய

நித்திய கேவல விருளு நின்மலன்
பத்திசெய் குநர்மல விருளும் பாறுமே. 67

மழுங்கிய திங்குதா ரகைம ழுங்கின
விளங்கிரு டிமித்தொளிர் விளக்கு மங்கின
செழுங்கதி ரவன்வரு மென்று சிந்தைசெய்
கழுங்கிய கவலையி லடங்கி ளுலென. 68

சந்திர னெனுமொரு தநயன் மாணொளிக
கொந்துகொண் டிலகிய கோலங் காண்டொறு
மந்தின்மெய் மலிந்தெழு மாழி மற்றவ
னந்தொளி காண்டொறு நந்தன் மேயதே. 69

வாரணத் தழனிகண் மனைதொ றீண்டின
வாரண முழக்கமுங் கிடைதொ றண்ணின
பூரண னருளிய பொருவின் மந்திரங
காரணி கருக்குரீஇ கரைதன் மேயின. 70

காவலர் நகர்தொறுங் கடுகுங் கைப்பறை
யோவின கடலொலி யோடு மற்றெதி
நாவலர் துதியொடு நன்கி யம்பின
தேவர்மந் திரந்தொறுஞ் செறிந்த டல்லியம். 71

இருளெனும் பகைக்கழிந தினையுந் தாமரை
மருமலர்க் கிழத்திதன் வாட்டம் வீட்டுவான்
பரிதியின் வரவினைப் பகருந் தாதென
வருணன்வந் தெழுந்தன னம்பு ராசிமேல். 72

பாசவறிவும் பசுவறிவும் பரந்த வருளின் முழுதடங்கத
தேசு விரியுஞ் சிவஞானந் திகழ்ந்து விளங்கு மாறேபோன்
மூசு மிருளின் விழிக்குதவு மொய்த்த வுடுவு மதியொளியும
வீசு கிரணத் திடைக்காப்ப வெய்யோன் வேலை முகட்டெழுந்தான். 73

இரவை யகற்றி யொளிபரப்பி யிலகுஞ் சுடரோன் குடதிசையிற்
பரவை குளித்துங் குணதிசையிற் பரவை குளித்து மணியுருவின்
விரவு முவரு மாறியங்க மிக்க விளைப்பு மொருவுநர்போற்
காமென் மலரிற் புனலெதிர்தூய்க் கரைந்தார் மறைபூ சுரர்பலரும் 74

அருளிற் பெரிய சிவபெருமா னென்ற வருவ மெதிர்நோக்குங
கருணை யடியார் திருமுகமுங் கண்ணு மனமு மெனமலர்ந்த
பெருகு மதுத்தா மரையந்தப் பெருமா னுருவப் பொலிவினுக்குத்
திருகு மதத்தா ரெனக்குவிந்த தேன்செங் குமுதத் தொடுகுவளை.

கரும வகையை யென்னென்று கரைவா மிரவிற் களிகூர்ந்து
பரிதி யெழலுஞ் சிலவுயிர்கள் பருவந் தழிந்த விரவெல்லாந்
தெருமந் தழிந்த சிலவுயிர்கள் செம்மாந் தின்பக் கடற்குளித்த
வெருவி லுயிர்க டொறுஞ்செயல்கள் வெவ்வே றாகி வளர்ந்தனவே. 76

விடிய லடுப்ப வைகறையே விமலன் பாத முளத்திருத்திக்
கடிமென் மலர்வா ளிகடொக்குங் காம னமரிற் சிறிதயந்த
முடிவி லரிய பெருந்தவத்து முனிவன் வளர்நாட் கடன்முடித்துப்
படியில் வளத்தி னுயர்சம்பு பதியை நோக்கிப் படர்கின்றான். 77

அமையாக் காதற் பெருங்காம வாழி பெருகி யயில்வேற்க
ணுமையா ளொருபா லினிதமா வுலக முழுது மொருங்குயிர்த்தா
தமைநா டியமெய் யுணர்வநதோ தளரப் பலகாற் றபுமுளத்தோ
டிமையா ரிறைஞ்சுந் திருவானைக் காவி னெல்லை யெதிர்கண்டான். 78

கண்டவ னெழுந்து பொங்கிய காமக் கடல்கரை யிகவுரு தடங்க
விண்டனன் கவலை தண்டென நிலமேல் விழுந்தன னெழுந்தன னின்ப
நுண்டுளி யரும்பும் விழியினன் மறைக ணுவல்செழு நாவின னடந்து
மண்டிய பொன்னி நதிப்புன லாடி வளஞ்செறி யகநகர் புகுந்தான். 79

ஆங்குள தீர்த்த மனைத்தினும் படிந்திட் டருள்கெழு பூதிசா தனமு
மோங்கிய விதியா லணிந்தெழுத் தைந்து முறைத்தரு வுருவரு வுருவாய்
நீங்கரு மலத்தின் வலிகெடுத் தெவர்க்கு நின்மல ஞானமுய்த் தருளும்
வீங்கிய கருணைப் பிரமலிங் கத்தை விழியெதிர் கண்டுதாழ்ந் தெழுந்தான். 80

என்று கூற விருடியர் சூதனை, நன்று கூற நவில்பிர மேசனென்
றொன்று நாமமங் குள்ள பிரான்றழீஇ, நின்ற வாறு நிகழ்ந்ததுகென் றாரே. 81

வேத நாவினர் மெய்யுணா நெஞ்சின, ரேத மேதுமெய் யாத வியல்பினர்
தீது தீரவி னுதலுஞ் செய்தவச், சூத மாதவன் சொல்லத் தொடங்கினான். 82

இராதந் திரமென் றொருகற்பத் தியைந்த கிரேதா யுகத்தளிகள்
விராவுங் கமல மலரணையான் விளங்குஞ் சிருட்டித் தொழில்பெறுவான்
பராவி வழிபா டினிதாற்றும் பரிசா லனைய திருநாம
மராவு மதியு மணிந்தாருக் காயிற் றெனமற் றறைகிற்பான். 83

கண்டு பணிந்த கவுதமனார் கடிமென் மலரா திகள்கொணர்ந்து
மீண்டு மலத்தின் வலிமுருக்கும் விதியாற் பூசை யினிதியற்றித்
தொண்டு பலவு மந்நாட்போற் றொழிக்கச் சிலநாள் புரிகாலை
யண்டர் பெருமான் பணிக்கிரங்கி யடல்வெள் ளேற்றி னெதிர்நின்றான். 84

விலங்கற் கரைய னின்றெடுத்த மிளிர்பூண் முலையா ளிடந்தழுவ
வலங்கற் கடுக்கை முடிகதிர்ப்ப வமரர் முனிவர் தொழுதேத்த

வலங்கொள் பூதம் புடைநெருங்க மழவெள் விடைமே னின்றாதந்
துலங்கு மலர்த்தா ளறப்பணிந்து சூழ்ந்து குழைந்து துதிக்கின்றான். 85

இணைமலர் சிந்தும் வேழஞ் சிலையொடு மெறிவித்தாய்நின்
சினகரந் தகர்த்த வேழஞ் சிவகதி படைவித்தாயா
னனகனே காவ னீழ லண்ணலே யமர ரேறே
யுனதருட் டிறத்தை யாரே யுள்ளவா றுணரு நீரார் 86

பதிவிர தைபருக கௌவாம் பாரிடை யொருத்தன் மருகு
யீதிமொளி பங்கி யாட்டிப் பிரான்மனை விழைந்த பாவ
விதமுபு சகல ஞாதத வீரிய மளித்தா யின்பம
பொதியருட் டிறத்தை யாரே யுள்ளவா புகலு நீரார். 87

மறைமுடி தனக்கு நீண்ட யாலயன முடிக்கு மெட்டா
தறைகழற் செய்ய பாத மதிக்குறைப் புனலும் பாம்பும்
பிறையுமென் றிவற்றை யெல்லாம் பிறங்கொளிச் சடையில் வைத்தாய்
நிறையருட் டிறத்தை யாரே யுள்ளவா நினைக்கு நீரார். 88

மருமலி கின்ற மெனபூ வாளிகள் கழைவி லேற்றிப்
பொருமொரு தேவ னாக்கை பொடித்தனை பொருவின் முதகி
யருவுகச் செங்க ணோச்சு மொருவருக களித்தி யானின்
திருவருட் டிறத்தை யாரே யுள்ளவா தெரிக்கு நீரார். 89

சிறுவிதி புரிந்த வேள்வி தீவினை யாக்கித் தேவாக்
குறுமுறை செய்தாய் தந்தை யுயிர்க்கொலை புரிந்த பாவ
முறுகுபுண் ணியமா தாக்கி முதன்மையோர் பாலாக் கீந்தாய
பெறுமருட் டிறத்தை யாரே யுள்ளவா பேணு நீரார். 90

ஒருவர்பாற் பிறந்தார் தம்முட் கலவிசெய் யொழுக்கந் தீதென்
றருளினை நினது மெய்யி னாக்கிய வுமைபொன் வாணி
வருமரன் மாயன் வேதன் மூவரு மணப்பச் செய்தாய்
பெருகருட் டிறத்தை யாரே யுள்ளவா பேசு நீரார். 91

தீம்புனல் குடைந்து தூய திரவியத் தியற்றும் பூசை
பாம்படி விதித்தாய் நீமற் றழசகடத் தாட லென்பு
வேம்பொடி கொண்ட தனறி வேடன்மிச் சிலுங்கைக் கொண்டா
யோம்பருட் டிறத்தை யாரே யுள்ளவா றுன்னு நீரார். 92

எண்ணிரண் டாண்டே முன்ன ரீந்தனை யதனைத் தெள்ளி
யண்ணிய கால னாவி யடர்த்தொரு பாலன் றன்பா
லெண்ணிரண் டாண்டே யென்று மெய்துமா கடைக்கண் வைத்தாய்
நுண்ணருட் டிறத்தை யாரே யுள்ளவா நயக்கு நீரார்.

# குபேரன் வழிபடுபடலம்.

வெள்ளி மால்வரை மேவிய வித்தகர்க்
குள்ள வாறுயர் பூசனைப் பேற்றினு
னன்று தோழ னெனும்பெயர் நாமடாறுங்
கொள்ளு மேன்மைக் குபேரனென் பானரோ 1

அளகை மாநக ராளுழி யையிரு
களனி லாவிய காதகன கண்ணுதல்
விளரில பூசனை மேதகு பேற்றினால்
வளரி லாவிய வையகங் காக்குநாள். 2

தன்கு டித்தம ராகிய தன்மையா
னன்கு முற்றிய நால்வகைச் சேனையுங்
கொன்கொ ழிப்பக் குறுகி நெருஞ்சமர்
பின்கொ டுத்திரி யப்பொரி தாற்றினன் 3

நதியின் மன்னவ னீங்கலு மன்னவன்
பதியின மல்கிய பல்வள முங்கவர்ந்
தெதிரின மேன்மை யிழந்து பெருங்கவின்
பொதியும் புட்பக முங்கொடு போயினன் 4

இருப திற்றெறுழ்த் தோளினி ராவணன்
செருவி னுய்ந்தொழி செய்திகேட் டேனங்
கொருவு மோகைய னேங்கு கயிலையைப்
பொருவி லன்பொடு பொள்ளென நண்ணினன். 5

திண்ண மாகிய செய்தவ மாற்றினு
னண்ண லாரடித் தாமரை யன்பொடு
வண்ண மாமலர் தூவி வணங்கினு
னண்ண லான்செய் நலிவினைக் கூறினன். 6

தேவ தேவ திகம்பர தேவர்கள
யாவ ருந்தொழு தேத்து மிறையவ
பாவ காரி பறித்தொழி செல்வநான்
மேவு மாறு விளித்தரு ளென்றனன். 7

சோபூ னினணங் கொண்டெய்ய சேசசலுங்
கேழி லாத கிளர் நந்தந் தங்கள
யோழி முறனபுரை சீப கலைடகணிசு
தாழி முலிம் சோ நவை சாயி மன 8

தேவ வருடம பன்னிரணடு செல்லப பாசு பதவிரத
மேவி யரிய தவம்புரிந்து விழைநது நமது பூசனையும
தாவில விதியான் மிகசசெய்தாய் தனச வினிநீ வெருவறச
பூவிற் பொதும்பா வளாநான பூமி யுளதங கினிதெய்தி. 9

பந்த மகற்றுங் குளிர்தீர்த்தம் பலவும் படிநது தவததுயாநத
நந்தி வணங்கு நந்தீச னவைக் வாயி லிலீச
முந்து மளவில் சிவலிஙக முனோத்தங் குளவா மவையெல்லாங்
கந்த மலாதூய வழிபடடுக் காத லொடிம்மை குதிகண்டாய 10

சின்னாள் கழியச் சிலைராமன செருவி லரக்க னுயிர்குடிப்பப்
பின்னு னனது பெருந்திருவும பிறங்கா நின்ற புட்பகமும
முன்னு ளனவே நின்பாங்க முறறு மிதுமெய யெனககயிலை
மன்னு நின்ற பெருமான் வகுத்து விடைநல் கினனயாதோ. 11

விடைதந் தருளுந் தனிததாய விடைமேயக குயாதத பெருமானை
மடைவிண் டொழுகும பேணாயினை வணங்கிச் சுயிலை வரைநீங்கி
நடைகொண் டவனித தலத்திலுறை னணணுந் தலஙகள பலபணிநது
புடைகொண் டொழுகுங் காவிரியின மருங்கு புகுந்தான் பொருட்கிழவன். 12

அஙகு நகர மெதிர்நோக்கி யவணித தடததி னுறைசசாரந்து
பொஙகு புனறகா விரியாதிப் புனிதத் தீரததம பலவும்
தஙகு விதியாற் றினிறபடிந்து தயங்கு மிலிஙகம பலவும
கொங்கு மலாதூய்ப பணிநதமுத லிஙகா திருமுன குறுகினன. 13

மீளா வடிமைப் பெயரனையின் வெண்ணு வலினமூக கட்கனியைத
தோளா மணியைச சுவையமுதைத் தொழுது வணங்கி வலமவந்து
நீளா தரவி னிருந்தொருசா ரிசியுந் துயிலா தெழுதலைநதுங
கோளா னதுதீர தரக்கணிததான குருவெங கதிரோன கடலுதித்தான. 14

அங்க ணொருசார தன்பெயாகொண் டமைய விலிஙக மொன்றிருத்தித
தஙகு மறையா கமவிதியாற் றண்டா விருப்பிற் பூசைபுரிந
தெஙகு நிறைநத பூரணனை யெல்லாப் பொருட்குங் காரணனைப்
பொஙகு பரமா னநதமெனும பொருளை நினைந்து தவமபுரிநதான 15

அற்றைத் தினம்போற் பலநாளங் கஙகைப் பெருமானை வழிபாடு
முற்றப் புரிநது வருகாலை முன்னோ ருருவச் சிலைராமன

வெற்றிப் படையா லரக்கனுயிர் விளிப்ப விழுந்த புட்பகமு
மற்றைப் பொருளுங் கைக்கொண்டு வாழ்ந்தான் றனது பதிசார்ந்து. 16

பேணா ருடற்றும் பெரும்பகையும் பிறவிப் பகைசெய் யாணவமு
மாணா வினையு மாயைகளும் வறுமை பிணியா திகள்பலவும்
வீணா யழிய வோட்டவரம் வேட்டாங் கருளு மெஞ்ஞானமுங்
கோணா வருளுங் கொடுத்தருளுங் குபேர லிங்கம் வழிபடினே 17

வடமா திரத்துத் தலைவன்மிக வழிபா டாற்றுந் திறமொழிந்தாங்
கிடமா மதிலக வொருமூன்றுஞ் சிந்து மிறையே யடியாராய்த்
தடமா மதிலொன் றினிதிழைத்த தன்மை தெரிந்த வாறுரைப்பாந்
தொடமா தவத்தீர் கேண்மினெனச் சூத முனிவ னோதுமால். 18



# திருநீற்றுத் திருமதிற் படலம்.

செங்கட் சோழருந் தெம்முனை வேந்தரு, மங்கட் கூடி யருட்பணி செய்யுநாட்
டெங்குக் கோயிலிற் சூழ்மதி லியாவையும். பங்கிற் கோலிப் படைக்க முயன்றனர். 1

ஆங்கு நாத னருளிரு லோர்மொழி, யீங்கு நீர்பணி யாவையுஞ் செய்தினோ
லோங்கி யாவையு முள்ளடக் குமதி, லீங்க வென்று நிவந்தது வானிடை. 2

ஓது வான்மொழி யொண்செவி யேறலு, நாத னருளீதெனி னன்றென.
நீதி வேந்தர நீண்மதில் செய்திலா, ராதி யெயிலைப் பாமான ரகன்றனர். 3

திருமால் பிரமன புருகூதன் றேவர் முனிவர் போற்றிசைப்ப
வொருநா வலின்கீழ் வீற்றிருக்கு முமையாள் கணவன மதிசூடி
மருவார் கொன்றை மலரலங்க லயங்குந் தடந்தோ ளமுதேசன்
பெருவாழ் வுலகுக் கருளுவான் பிறங்கு மதில்செய திடநினைந்தான் 4

பணியா திடினு மதுவேற்றுப் பயனைப் பெறமா லயனமுதலோர்
தணியா விழைவி னருட்கடைக்கண் டன்னை நோக்கி யெதிர்நிற்ப
வணியா நகர மெவற்றுள்ளு மதிக வுரிமை தனக்காமிம்
மணியார் நகர்க்கு மதிலோனே வகுப்பித் திடுமா மதிசதிட்டான. 5

தாழ்ந்து பழிச்சு மடியார்க்குத் தனதின் னருளைத் தந்தேடு
வீழ்ந்து வழங்கும் பெருங்கருணை விமல னிந்தப் பணியொருவர்
வாழ்ந்த மனத்திற் செயவிரப்பின் மறுக்க மாட்டா மையைக்குறித்தே
போழ்ந்த மதியா திகள்கரந்து பொறப வேறு வாநினைந்தான். 6

அருளிற் கலந்த திருவேட மல்லாற் றனக்குப் பேருவகை
தருவ திலையென் பதுமதுவே பணிக்குத் தகுவ தென்பதுவு
மருளிற் கலந்தா ருமறிய வார்செஞ் சடையுங் கற்கலையுந்
தெருள்கண் மணியு நீற்றணியுந் திகழு முருவத் தொடும்போந்தான். 7

தவத்தால் வருந்த திருப்பணியாற் சால வருந்த லவைகளே
யவத்தாம் வினைகண் முழுதகற்றி யருள்சேர் கதிக்கு வித்தாகுல
பவத்தாற் சுழல்வோர் களுமறிந்து பணியே புரிய வைந்தொழிலு
நவத்தா ரணியா திகட்கியற்று நம்பன் கருத்தாற் செயமதித்தான்.

அவனா லவளா லதுதன்னா லனைத்தும் புரியுந் தனதியல்பை
புவிமே லெவர்க்கு மறிவிக்கும் பொருட்டும் புவியோர்க் கலதுபணி
தவவா யாமை யறிவிக்கும் பொருட்டுந் தச்சர் முதலோரைத்
துவர்வார் சடிலப் பெருமானார் தொழிலுக் குரிய ராக்கினார். 9

எல்லாம் வல்ல தனதியல்பு மீண்டுங் கருமந் தமக்கியைய
வெல்லார் தமக்கும் பயனுதவு மியல்பும் விபூதி யெனும்பெயரைப்
புல்லா நின்ற திருநீற்றின் பொலிவும் விளங்கக் கூலிக்கு
நல்லா ராகி நீறளிப்ப நயந்தா னாவற் பெருமானா 10

தெளிக்குந் திருநீ றெத்தகைத்துஞ் செய்கைக் கேற்பச் செழும்பொனாயக்
களிக்கும் வகைசெய் தறன்கடைகள் கதுவா தொழிக்கும் பெருஞ்சிறப்பால்
வெளிக்க ணுருசித் தரைப்போல விளையாட் டயரு மமுதேசர்
கொளிக்கும் வகையின் றியெவரு முறுதி யோடு பணிபுரிவார். 11

நிலைபெ றப்பல துளைதுளைத் தாணிக ணறைவிக்
கொலைமு கத்தவ னெப்படை குடங்கையி னேச்சி
மலைபி ளர்த்தவன் பூண்யிற் கொணர்குந ரொருபாற்
சிலைபி ளந்தரிந் திணங்குறச் சேர்க்குந ரொருபால். 12

பொருப்புக் கோபுரப் புதுமணல் குவிக்குந ரொருபா
னெருப்புக் கொப்புற மூலத்திர ணீற்றின ரொருபா
லிருப்புக் கட்டிக ளெரியின்வைத் தடிக்குந ரொருபாற்
கருப்புக் கட்டிக ணிறைகளிற் கரைக்குந ரொருபால். 13

ஏறு மிட்டிகை வேறுவே றியற்றின ரொருபாற்
கூறு மிட்டிகை குழைதழற் படுக்குந ரொருபா
லூறு கொட்டிநுண் மணல்விராய் நுணுக்குந ரொருபால்
வேறு பட்டவல் வினைகளு மொறுக்குந ரொருபால். 14

இன்ன வாறுபல் வினைஞரு மீண்டின ரிழைப்பக்
கன்னி மாமதில் வளர்தொறுங் கண்ணுதற் பார்ந்து
நன்னா வேட்டமோ டடுத்தவெண் ணாவலி னிழலா
ரன்ன மாமதில் வரிசையே லடிமிதித் திவர்ந்து. 15

முற்று மோர்முறை சூழ்ந்துமும் மலப்பகை கடந்து
பற்றி லாருயிர்ப் போதந்தன் பாதத்தா மரைக்கீ
ழுற்று வேறறத் தோன்றுமு தொளித்தென நிலைத்தி
னற்ற மேதமி லாவகை யடைச்சினர் மாதோ. 16

மண்ணிடை வரிசை யெல்லாம வைகலு மழுத்திப் பின்னா
விண்ணிடை நிவந்து தோன்ற வியன்மதி லிழைத்துத் தம்பா

னண்ணிய வரிட்ட நீங்கி நலத்தகு மிட்ட மெய்த
வண்ணினர் தம்மை நோக்கி யருளினு லருளிச் செய்வார். 17

சித்தெல்லா முடைய நம்மாற் றிகழ்தரு பொருள்க ளெல்லாம்
பைத்தநா ணிலத்தீ ரிந்தப் பரந்தமா மதிலி னுக
வைத்தன மாத லாலே வரங்களை வேட்டோ ரெல்லாம்
மெத்திய வன்பா லிந்த வியன்மதில் சூழ்க வென்றா. 18

அன்றுதொட் டவனி யுள்ளோ ரருமகப் பேறு வேட்டும்
வென்றியை விழைந்து மாறு வெறுக்கையை விழைந்து மின்ப
நன்றியை விழைந்துஞ் சால நாட்டினை விழைந்து மிவ்வா
ஞென்றிய மதிலசூழ் போநதிட் டிலப்பிலா வரங்கொள் கின்றார். 19

மதிலினைச் சூழ்வா மென்று மனையகந் தனை நீங்கிற்
பொதிதரு பாவ மாதிப் புலவினை யவனை நீங்கு
மெதிர்கொளின் வரங்க ளெல்லா மெதிர்கொளு கதவின் ஞானங்
கதவுறுஞ் சூழிற் சூழுங் கரிசறு முதத்தி நான்கும். 20

வலம்புரி கின்றோ மெல்ல வைககுமோ ரடிககுக கோடி
நலம்புரி பரிமே தங்க ணவையறப் புரிந்த பேறுஞ்
சிலம்புறழ் மதிலை யந்தோ சிறிதவ மதித்தா ரேனுங்
குலம்புரி சுற்றத் தோடுங் கொடுநர குழப்ப ரென்றும். 21

தடநெடு மதிலை யோர்காற் றம்மியல் பானே சூழின்
மடவாக ளேனும் பாவ வல்வினை முழுதுந் தீர்ந்து
கடவுள ராவ ரென்னிற் கரிசறு முனிவீ ரந்த
விடவிய மதிலின் மேன்மை யாவரே யியம்பு நீரார். 22

தண்ணிய தாகி யெல்லார் தமக்குமின் புதவித் தானு
நண்ணிய வுணவ தாகு நறும்புன லுருவா நின்ற
வண்ணலே யானுந் தாழா தவமதித் தவரை முன்னாப்
பண்ணிய முறையுங் கேண்மி னெனப்பகர் கின்றான் சூதன். 23



# அமுதலிங்கேசரருண்முறைசெய்தபடலம்

குவலயத்துச் சிவம்பெருக்குங் கோச்செங்க ணானிறுத்த
தவலில்பெருஞ் சிவத்துவிசர் சகலகலை வல்லவரா
யுவமையிலா கமக்கடலி னுள்முழுதுந் துளைந்தவராய்க
கவளமத கரியுரியார் கழலருச்சித் துறுநாளில். 1

மன்னவரும் பணிகேட்ப மறுபுலத்தி னுள்ளவரு
மென்னவினை புரிந்திடினு மின்றியமை யாததமை
நன்னயத்தி னுடன்படுக்கு நலத்தகைமை யுடைமையினா
லன்னசிவத் துவிசரொலா மகமதித்துத் தருக்கினரால். 2

ஒப்பற்ற ஞானதலத் தொழியாத வாழ்க்கையினு
மப்புற்ற திருமேனி யமுதலிங்கர் பூசையினுஞ்
செப்புற்ற பெருமையெலாந் திகழ்ந்ததனை யென் றறியாமே
தப்புற்ற வகமதிப்பாற் றவறுகளே புரிந்திட்டார் 3

கணிகையர்த நலநுகர்ந்துங் கண்ணுதலார் பொருள்கவர்ந்தும்
பணிபுரிதல் பாணித்தும் பயிலொழுக்க நனிவிடுத்து
மணிதுளக்க வியமியம்பல வகுத்தலினை யல்லாது
பிணிதுளங்க வுபசாரம் பேணாது பிழைத்திட்டார். 4.

உள்ளந்தங் கிபகாவே யுடையவரா யிவர்நடப்பக்
கள்ளந்தங் குறினவர்க்குக் கள்ளந்தங் குதற்குரிய
வெள்ளந்தங் கியமுடியார் விளங்குதிரு வுளங்கறுத்துப்
பள்ளந்தங் கியநதியிற் படுத்துமென நினைந்திருந்தார். 5

பிழைதீர்க்கும் பிச்சாட னாயகர்க்குச் சிறப்பெய்தத்
தழைநாவ லுடையாரகுத் தனையனொரு வனைவைத்து
விழைவோடு மனைவோரும் வெளிக்கொண்டு கொள்ளிடத்துக்
கழையாடாப் பெருநீத்தங் கட்டப்பதற்குக் கலத்திவர்ந்தார். 6

முருகுவிரி வெண்ணாவன் மொய்நிழலின் வீற்றிருந்தார்
திருவருளா லொருகூறை சென்றலைப்பக் கலங்கவிழ்ந்து
பெருகுபுன லிடைமடவார் பிள்ளையுட னனைவோரும்
பகைவரா லுற் றுயிர்மடிந்தார் பார்முழுதும் பனிப்பெய்த.

அருளினுக் குவமை யில்லா வமுதலிங் கேசர் தாமே
திருவுளங் கருத்துச் சார்ந்த சிவத்துவி சரையுங் கொன்று
மொருவர்கண் மாட்டுங் குற்ற முணற்று திருத்த னன்றென்
றிருநிலத் தவர்க ளெல்லா மெண்ணின ருறுதி கொண்டார். 8

வெறுப்பறு தாயின் மிக்க வெறுப்பறு தாயே யான
வெறுத்தமென் சாயை நாகல் விரிநிழ லிறைவர் தம்மால
வெறுப்பன செய்தா ரெல்லாம விளிந்தன ரென்று லந்தோ
வெறுப்பன யாவர் மாட்டும் விளைத்திடா திருத்த லேயாம். 9

இரும்புன னதியிற் செல்லா தெஞ்சிய சிறுவன் றனனைப்
பெரும்பெயர்ப் பொருளா யுள்ளார் பேரருட் கிலக்க மாக்கி
யரும்பொருட் கலைகள் வேதா கமங்களு மருளி மேன்மை
தரும்பணி விடையின் வைத்தார் சகமெலா மிறும்பூ தெய்த. 10

வெற்றிவேற் குமரப் புத்தேள் வெள்ளிமால் வரையி னின்றும்
பற்றிகல் கடந்தார் பூசை பயிற்றுதற் குரியா ரென்று
செற்றிய வளத்தின் மிக்க திருப்பிட வூரின் மேனாட்
குற்றமின் மறையோர் தம்மைக் கொணர்ந்துதா பித்திட் டாரால் 11

அத்தகு மறையோர் தம்மு ளறிவினிற் பெரிய ராகிப்
பத்தியின் வழுவாச் சிந்தை பரித்தவர் சிலரைக் கூவி
யுத்தம பூசை யாதி யுஞற்றுதற் குரிய ராக
வைத்தன ரொருவெண் ணேறுவன் மணிநிழ லமர்ந்த வள்ளல். 12

தொல்வினைத் தொடரா மேன்மைத் தூயவே தியர்க டாமுங்
கொல்வினைக் குரிய சூலங் குடங்கையிற் கொண்ட செம்ம
னல்வினைக் கருளு மாறு நல்லன வல்ல வான
புல்வினைக் கொறுக்கு மாறும் புந்தியிற் றேர்ந்து தேர்ந்து. 13

அச்சமு மன்புந் தாங்கி யண்ணலார் மகிழ்ச்சி கூர்ப்ப
வெச்சமில் லாத சைவம் வைதிக மிரண்டி னானு
நிச்சலும் பூசை யாதி நின்மலப் பணிக ளெல்லா
முச்சகம் வியக்கும் வண்ண முற்றுறப் புரியா நின்றார் 12

உமையொரு பாகர் பூசை யுஞற்றுமந் தணரை யந்த
வமுதலிங் கேச ரென்றே யகமதித் திறைஞ்சி னோரு
மிமையவ ராதி யோரா லிறைஞ்சிடப் படுவ ரென்றாற்
றமதருட் பெருமை யாரே சாற்றுதல் வல்ல ரீரார். 15

பரிந்துபின் னிரக்கஞ் செய்த பரமனார் சரிதந் தன்னைத்
தெரிந்தவர் தெரித்தோ ரெல்லாந் தீவினை முழுது நீங்கி

விரிந்தபல் கதிக டம்முள் வேட்டநற் கதியுண் மேவிப்
புரிந்தபே ரின்ப வெள்ளப் புணரியுட் டிளைத்து வாழ்வார் 16

பொய்வினை யறுக்கு ஞான பூமியில் வசிக்கும் பேறுங்
கொய்யலர் மலருந் தீர்த்த மொன்பதுங் குடையும் பேறுஞ்
செய்யரு ளமுத லிங்கர் தெரிசனப் பேறு மெய்தும்
பையவிப் புராணந் தன்னைப் படித்தவர் கேட்டோர்க ளெல்லாம். 17

விழுமிய வமுத லிங்கர் வியத்தகு சரிதந் தன்னை
யெழுதினோ ரெழுது வித்தோ ரெழுதியீந் தவர்க ளெல்லாம்
வழுவறு மெழுத்தொவ் வொன்றுக் கொரோவொரு கற்ப மான்ற
செழுவிய சிவலோ கத்திற் சென்றுவாழ்ந் திருப்ப ரன்றே. 18

என்றுயர் சூத மேலோ னிலகிய ஞான பூமிக்
கொன்றிய சரித மெல்லா முரைத்தன னுரைத்த லோடு
நன்றியின் மலர்ந்த சிந்தை நைமிச முனிவ ரெல்லாம்
வென்றிகொள் பரமா னந்த வெள்ளத்துட் டிளைத்து வாழ்ந்தார். 19

அருள்வளர் சம்பு மூலத் தமுதலிங் கேசர் வாழ்க
வருமகி லாண்ட வல்லி வாழ்கவே தாக மத்தின்
பொருணிலை வழாது வாழ்க புகழ்திரு வானைக் காவார்
திருநகர் வாழ்க வாழ்க தேயங்க ளனைத்து மாதோ. 20



# செய்யுள் அகராதி.

## அ.

பயாசருரு —
பயிலியவுலகம்
83 பதஜ...

மா.



மி



மீ.



மு.